உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# அருணகிரிபுராணம்.

சிதம்பரம்

## மறைஞானதேசிகர்

அருளிச்செய்தது.

இது

மேற்படியூர்

வாமதேவ

முருகபட்டாரகரால்

பலபிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து,

சென்னபட்டணம்:

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

விக்கிரம௵ ஐப்பசிமீ. 1880

இதன் விலை அணா - க0.

# சூசீபத்திரம்.







உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# அருணகிரிபுராணம்.

## விநாயகர் காப்பு.

தூய்ய கொன்றை முடியணி சோதியா
னையன் மேவு மருண கிரிப்புகழ்
வைய மெங்கு மகிழ்வுற வான்றமிழ்
செய்ய வைங்கரன் சேவடி சேர்த்துவாம். (க)

நம்பி நாளுஞ் சிரமுற நாட்டுவாம்
வெம்பி வந்த பிறவி விடுக்கவும்
மொய்ம்பி யற்றமிழ் மாலை முடிக்கவுந்
தும்பி யானனன் பாதத் துணைகளே. (உ)

கரண மாபுல னுணவ கார்மிய
மரண மாகத் திகழ்ந்த மருப்புடன்
முரண மாகைச் சிலம்படி முண்டக
மரண மாவெம் மிதயத் தணிகுவாம். (௩)

## பாயிரம்.

### அருணகிரிநாதர்.

பூமீது பயில்வானும் புனன்மீது துயில்வானும் புவனி மாது
நாமீது திகழணங்கு நாரணியும் பணிந்தேத்த நயப்பான் சாதந்
தோமீது துடைமினிது துடைத்தற்குச் சுருதிசொலு நீதி யேது
வாமீது புரிமினெனு மருணகிரி யமலனடி பணிவாமன்பால். (க)

## பராசத்தி.

அருக்கனொடு பிரியாத வலிரொளியைப் போன்றுமலத் தநாதி முத்த, னொருத்தனவ னொடுபிரியா துறைந்துலக மாக்கி யளித் தொடுக்கி யானென், செருக்குமரித் துயிர்க்குமல பாக த்திற் சிவனடியுந் தெரிசிப் பித்தே, யிரக்கமுட னருள்புரியும் பராசத்தி பதமுமனத் தெண்ணு வாமே. (உ)

## அடியருணகிரிநாதர்.

பளிங்கனைய மேனியனைப் பால்பவள மைகனகம் படிக மென்ன, விளங்குமுக மைந்துவிழி மூவைந்து முடையானை வேணி தன்னி, லிளம்பிறையு மணிந்திலங்குஞ் சதாசிவனைப் பதமிரண்டை யிருதோ ளானை, யுளங்குளிர வருணகிரிச் சார லிறு லயத்திலிங்கத் துன்னு வாமே. (ங)

## உண்ணாமுலையம்மை.

பண்ணார்மறை பயின்றேநமக் குறுதிப்பெரும் பேயனை
விண்ணாடரும் பணிந்தேத்திட விதியாலருள் விமலை
பெண்ணாணலி யெனும்பிள்ளைகள் பெற்றேயவர் தம்மா
லுண்ணாமுலை யுமையாள்பதம் பணிவாமுளத் துகந்தே. (ச)

## சபாநாயகர்.

விழைவாமிரு வினைவேறெனு மிருளோடவு மெமதுட்
பழைதாமருண் மயமாகிய பதிஞானமு முறவு
மிழைநேரிடை மடவாளுமை யிசைபாடவு மாடு
மழகார்தரு மதிருங்கழற் பெருமானல ரடியே. (ரு)

## திருவண்ணாமலைநாதர்.

புகழும்பெரும் புலவர்க்கிரு நிதியின்னருள் புரியு
மகிழும்படி சிவலோகமும் வழங்குந்திட மண்ணை
யகழுந்திரு மாலுக்கரி தாகும்மென துள்ளே
திகழுந்திரு வண்ணாமலைப் பெருமானடி சிறந்தே. (சு)

## செல்வவிநாயகர்.

சாதக வல்வினை தானறவே தாரக மாமுன தாளருளாய்
போதக னெல்லியி னூடிடுவான் பூரண ஞானமறை பாடிடுவான்
மோதக னன்புமை யாள்கணவன் மூவுல கும்முய முன்னுதவும்
வேதக செல்வவி நாயகனே வேறும லந்தவி நாயகனே. (எ)

## சுப்பிரமணியர்.

தரணிதலத் தினிதிருந்து சார்ந்துசிவ புரமமலன் சரணஞ் சூர்வா, னிரவுபக லெனுமிரண்டு மில்லாத நிட்டைபெற வெ ண்ணி யாமே, யரனமல னருள்குமர னருணகிரிச் சாரலினா லயத்தின் கீழ்பால், வரமுடைய கோபுரவாய்த் தலினிலவு கந் தனடி வணங்கு வாமே. (அ)

## அதிகாரத்திருநந்திதேவர்; மூன்றும்பிரகாரத்துத் திருநந்திதேவர்; மகாகாளர்; இடபதேவர்; சண்டேசுரநாயனார்.

அரனமலன் கணத்ததிப னருணந்தி பதம்பணிவா மரண மூன்றுள், வரமுடைய நந்திபத மாகாளர் மலரடியு மனத் தின் வைப்பா, முரமுடைய விடையடியு முளத்தணிவாந் தந் தைபத மொழித்து வாளாற், பரமசிவ னருள்பெற்ற சண்டம றை யவனடியும் பணிவாம் பாங்கால். (கூ)

## சனற்குமாரர்; வியாதமுனிவர்; சூதமுனிவர்; நைமிசாரணியமுனிவர்.

சனற்குமரன் சரணவிணை தலைத்தலைமேற் றாங்குவமெம்
மனத்தினுற வுறவைப்பாம் வியாதமுனி மலர்ப்பாத
மெனக்கினிய சூதமுனி யிணையடியெம் மனத்திலங்கும்
வனத்துறையு மற்றையர்தம் மலரடியும் வணங்குவமே. (௧௦)

### கௌதமமுனிவர்.

அலருமா கமவிதியா லருணகிரி தனையருச்சித் தடிவா ரத்தி,
னுலகேழு முயவுதித்த விலிங்கத்து மருச்சித்தா லயமு மூரும்,
வலமாரும் வானவர்கம் மியனுலே புரிவித்து மகிழ யாருந்.
தலமேழும் புகழவருந் தவமுயலுங் கவுதமன்ருள் பணிவாந்
தாழ்ந்தே. (கக)

### காரைக்காலம்மையார்.

முன்னுணர்வி னெடுதோன்றி முந்நீர்க்கா ரைக்காலிற்
சின்மயன்செய் திருநடத்தைத் திளைத்தால வனத்துயிர்கட்
கன்னியமில் லமலனரு ளாகமமு மருந்தமிழாற்
பன்னியெமக் குணர்வளித்த புனிதவதி பதம்பணிவாம் (கஉ)

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

அருந்தியுமை யருள்கிண்ணத் தடிசிலைவே தாகமத்திற்
றிருந்துபயன் செந்தமிழா லெமக்களித்த தேசிகனைக்
குரும்பைமுதி ராண்பனையிற் குருத்துதிக்கத் தமிழ்கூறிக்
கருஞ்சமணர் களைக்கழுவேற் றியமீளி கழல்பணிவாம். (கங)

### திருநாவுக்கரசுநாயனார்.

பன்னெடுநா*ளமண்வைகிப் பருவமுறப் பசுபாசஞ்
சின்மயனின் னருள்பெற்றுச் சிறப்பிணியுந் தீர்ந்தானை
யின்னிசையா லியலியம்பி வாகீச னெனுநாமந்
தன்னையுநின் மலனருளாற் றரித்தவனைத் தாள்பணிவாம். (கச)

### சுந்தரமூர்த்திநாயனார்.

வடகயிலை மலைபிரிந்து வந்துதித்திம் மண்டலத்தெங்*
கடவுடகைத் தாட்கொளலுங் கட்டுரைத்துப் பதிகமவ
னடிநிழலை யடைந்தாரை யறிவித்தே யெமக்கிந்தப்
படிமுழுதும் புகழ்நிறுவு மாரூரர் பதம்பணிவாம். (கரு)

"சவபுரா" மாணிக்கவாசகசுவாமிகள்.

பெருந்துறையிற் குருந்தநிழற் பெருமானின் னருள்பெற் றுத், திருந்துமறைப் பொருளெமக்குச் செந்தமிழாற் றெருட் டியெமைப், பிரிந்திடவே பிறப்பிறப்பும் போருள்செய் பெ ருந்தகையைப், பரந்தபுகழ்த் திருவாத வூரனைத்தா ளிணைப ணிவாம். (௧௬)

திருமாளிகைத்தேவர்முதலியோர்.

நின்மலனின் னருளாலே நீத்துலக வாழ்க்கையினைச்
சொன்மயனைச் சிவனவனைத் துதித்திந்தச் சொலினுலெம்
புன்மையினைப் போக்கியமா ளிகைத்தேவன் முதற்புலவர்
நன்மலர்த்தா ளிணைபணிந்து மனத்தகத்து நாட்டுவமே. (௧௭)

சிறுத்தொண்டநாயனார்; இயற்பகைநாயனார்;
ஏனாதிநாதநாயனார்முதலியோர்.

மைந்தனைத்தான் வதைத்தடிசின் மாதவனுக் கினிதருத்தி
யுய்ந்தவனை மனைவிதனை யந்தணனுக் குதவினனைச்
சிந்தியிடு மெதிரிநுதற் றிருநீற்றைத் தொழுதானை
யிந்தமுறை யியற்றியவே னையாடியு மிறைஞ்சுவமே. (௧௮)

மெய்கண்டதேவர்.

வேதத்தி னரும்பொருளை விமலனரு ணந்திக்குப்
போதித்த சிவஞான போதத்தைக் குருமரபா
லோதித்தேர்ந் தருந்தமிழா லெமக்குணர்த்தி யெம்மூனஞ்
சேதித்த மெய்கண்ட தேவனடி சிந்திப்பாம். (௧௯)

சிவபத்தர்.

புனிதவுடல் பொன்னிகளம் பொன்னுலகிற் பூதலத்தின்
மனிதருடல் வல்லிருப்பு வல்லினைவை யிரண்டினையுந்
தனையனைய சிவனமலன் றரிப்பானென் றவன்சரண
நினையுமவ ரெவரேனு மாகவவ ரடிநினைவாம். (௨0)

## வாழ்த்து.

வானவரு மாதவரு மறையவரும் வாழ்கமகிழ்
தானினமும் வாழ்கமழை யவனிமகிழ் வுறப்பொழிக
ஆனவினை யொழிந்தழுறை யுறவுலகந் தனையோம்பித்
தானவினை புரிமன்னர் தழைகபுவி தலத்தென்றும். (உக)

அந்தணர்க்கு மருந்தவர்க்கு மாதுலர்க்கு முச்சிதனில்
வந்தவர்கள் யாவருக்கு மகிழ்வுறவோ தனமளிப்பார்
தந்தமர்க ளொடுந்தழைக தமிழ்விநியா ரியவிதியுஞ்
சந்தையுறக் கற்றுணர்ந்தார் தாமுமவர் தமர்தாமும். (உஉ)

## நூல்செய்தகாலம்.

ஆண்டுகலி யுகத்தினுக்கு நானூற்று முப்பத்தி ராயி ரத்து, மீண்டுறுநா லாயிரமு மறுநூறு மைம்பத்து நான்கு நீங்க, வீண்டுபிர மாதீச வாண்டின்மக ரத்தெழுவா யேகா தேசி,தீண்டிரவி வாரத்தின் மான்மாகேந்திரம்வணிகந் திகழும் போதில்

## நூல்செய்யத்துணிதல்.

தருணமதிச் சடைமுடியா னருணகிரிச் சதாசிவன்சந் நிதிவா மத்திற், புரவிகள்பூண் மண்டபத்தி னல்வேத மாகமங்கள் புராண மெல்லாந், திரிவுமறத் தேர்ந்துணர்ந்த வைதிகருஞ் சைவர்களுந் திகழ்சங் கத்தி, னருணகிரி வரந்தமிழா லறைகவென வவரருளப் பகர்வா மன்பால். (உச)

## நூல்வரலாறும்; அவையடக்கமும்.

பந்தமறச் சூத்திரர்க்கும் பணிமொழியா ரவர்தமக்கும் பரிவு கூர்ந்தே, நந்திதனக் கம்மாதி நம்பனருள் புரியவரு ணந்திதானு, மந்தவிதஞ் சனற்குமரர்க் கருளவவர் வியாதமுனிக் கருளிச் செய்யப், புந்திமகிழ் வுறச்சூதர்க் கவர்புகன்ற பதினெட்டுப் புராணந் தன்னுள். (உரு)

சைவபுரா ணந்தனிலா யிரகோடி யுருத்திரசங் கிதைதான் சான்றோ, ரைவகைவேள் வியரமரு மருணகிரி வூரத்தைவிரித் தறைத லாய்ந்தே, கைவலியம் பெறவெவருங் கற்றுணர்ந்து செந்தமிழாற் கழறு கின்றூர், தைவிகவாக் கினரருளா லெம துரைக்கா சரித்துவரஞ் சமைப்பா ரென்றே. (உசு)

## நூற்பெருமை.

பூவலயந் தனிற்புனித தலேச்சுரமிப் பொருப்பிந்தப் பொருப்பின் மேன்மை, நாவிருநூ றெண்ணூறு முடையானே யிலவல னன்கு வேதப்,பாவுமெழு நான்கொடறு மூன்றுமுணர் கவுதமனும் பகர வல்லன், றேவர்குர வனும்விரித்துச் செப்பவலன் மற்றெவரே தேர்ந்து சொல்வார். (உஎ)

## பதிகம்.

முந்தியகற் பாந்தத்தி லகம்பரமென் றயன்மொழிய மோகத் தான்மா, லந்தவயன் றனைக்கன்றி யகம்பரமென் றாடவவர்க் களக்க வொண்ணச், செந்தழலாய்த் திகழ்ந்தவர்முன் சிவனவர்தம் மூளச்செருக்கைத் தீர்த்த வாறு, மந்தவழ வினையமல னருணகிரி யெனத்தரையி னமைத்த வாறும். (உஅ)

மகிழ்ந்துமையாள் கயிலைமலை நிலவமலன் கண்புதைத்து வந்த குற்றம், புகழ்ந்திடுமெய்த் தவத்தாலே போக்குதற்குக் காஞ்சியெனும் புரிபுக் கங்கே, நிகழ்ந்தசிவ லிங்கத்தி னிமலனையர்ச் சித்தலுநின் மலன்வாக் கேவத், திகழ்ந்திலங்கு மருணகிரி சேர்ந்தங்கே யுருந்தவத்தைச் செய்த வாறும். (உகூ)

இந்திரனு மிமையவரு மகிடனொடு பொருதுவலி யிழந்தெய்த் தங்கே, வந்துமையாண் மலரடிமுன் வணங்கித்தங் குறையறைய மலையா ளப்போ, தந்தவசு ரனைத்துர்க்கை யெனுமணங்கை யேவியழிப் பித்த வாறு, மந்தனவன் களத்திலிங் கங் கண்டதனைத் தன்கரத்தில் வாங்கு மாறும். (௩0)

ஒருவாதே யதுகரத்தி லுறலுமுமை யிதுவென்னென் றனலு மீச, னருளால்வா னாணியெழ வதுகேட்ட வவ்வ ழியவ் விலிங்கந் தன்னைத், திருவாருங் கட்கமெனுந் தீர்த்தத் தின் றீரத்தர்ச் சித்த வாறும், வரமாருந் துர்க்கைதனை யத்தீர் த்த தடந்தன்னில் வைத்த வாறும். (கக)

முப்பொழுது மநாதிமல மூத்தனையர்ச் சித்துவிழா முடி த்துப் போற்று, மப்பொழுதம் பிகைதன்முன் னருணகிரி நில வமலன் றோன்றக் கண்டே, திப்பியமா மவனுருவைத் திருந யனம் புதைத்தபிழை தீர்ந்த வாறு, மொப்பரியா னவனுடை க்குப் பிரியாத வரமுதவி யுகந்த வாறும். (கஉ)

புடைதொழுது நின்றபுரந் தரன்முதலோர் தமைநோக்கிப் புனித னிந்தத், தடவரையை வலஞ்செய்கை தாம்வேண் டும் பலத்தினைச்சா திக்கு மென்றே, யடிநடையின் முறைநட க்கும் பலத்தினையு மின்னருளா லறைந்த வாறுங், கடவுளரு ளாலமரர் கம்மியனு லயம்புரியுங் கண்ட வாறும். (கங)

புழுகுதனை யொருநாவி நாடோறு மிப்பொருப்பிற் பூசிப் பூசி, யொழுகிமரித் தப்பலத்தின் மனுகுலத்தி னுற்பவித்தொ ண் புழுகுந் தேடி, வழுவறவே சாத்துவித்துப் புழுகுமகி ழரு ணகிரி வரைப்பி னேங்கு, முழுமுதலி னடியடைந்த முறை யினையு மிந்நூலின் மொழிகு வாமே. (கச)

பொருவரிய மெய்ஞ்ஞானக் கண்ணாலே யெமைக்கண்டார் புவிமற் றெல்லா, மொருவியிடுங் காலமெலா மொன்றுவரெம் பதகிழவிவ் வுண்மை ஞான, மரிதுயிர்கட் கெளியநெறி யாக் குவமென் றயன்றிருமா லாற்றும் போரி,னெரியுருவாய்க் கயி லையொழித் தருணகிரி யாகியிலுங் கெல்லை சொல்வாம். (கரு)

பாயிரமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅ.

## திருநாட்டுச்சிறப்பு.

மல்லன்ஞா லத்துத் தொண்டை மண்டல மதற்கு நாப்பண்
கல்வியான் முற்றி ஞானக் கண்ணுறத் தவஞ்செய் வோர்க்கு
மில்லையென் றுதே தம்பா லுள்ளதின் னருளா லீயு
நல்லவர் நாளு நீடி நகர்வித மருணை நாடே. (க)

விளைவள வயல்க ளெங்கும் வேழநீள் வழை யெங்கும்
வளவிய தாழை பூகம் வருக்கைதே மாவு மெங்குந்
தளவமல் லிகைமந் தாரஞ் சாதிவில் வாதி யெங்கு
நளினவா விகளு மெங்கு முளநக ரருணை நாடே. (உ)

வேறு.

முருகவிழ்கு ருந்ததின்ம ராவிளைவு தேறுமுளை சாதி முதனு
மிருகரையு முந்திவிதி யான்முழுகு வாரிடரி ரித்தொழுகுநீர்த்
திருநதிய ருச்சனைசெ யச்சிவனை வேண்டியிட லுந்திருமுனள்
வருநதிவ ரத்தைமணி தர்க்குதவு கங்கைநதி மானுமிதுவே. (ங)

எண்ணரிய நெல்லினைவி ளைத்தொழுகு நீருதவி யெண்டி
சையினு, முண்ணவெவ ரும்மமுத மோதனமு நல்குமுப காரி
யிதுதான், விண்ணவர்கள் பூசனையை வேதியர்க ணீதிபகர்
வேத விதியாற், பண்ணநல பாணியினை யென்றுமுத வும்ப
ரப தத்தி னுறவே. (ச)

வேறு.

தன்னேரா மித்திருநீர் வயலெங்குந் தடுத்துழவ
ரின்னுணன் றுளென்றே யெரினுழா திளங்குழைதாள்
பன்னுளிற் பருவமுறப் பலவிதசா லியும்வித்தி
நன்னுளிற் பன்றுள்சென் றிடவளர்த்து நாற்றினையே. (ரு)

வில்லைநிகர் புருவத்தார் வேலினைப்போல் விழியிணையார்
முல்லைமுகை முறுவலினர் முழங்கியிடக் கிளரோதை
மல்லரியும் வயரோரும் வானவர்கோ னடிவணங்கி
நல்லுழவு தொடங்குழமி நாற்றினைச்செய் யிடைநடுவார். (சு)

துடியனைய விடுகிடையார் தொண்டைநிகர் செவ்வாயார்
பிடியனைய வடிநடையார் பிறையனைய சிறுநுதலார்
வடமனைய வயிறுடையார் மயிலனைய சாயலினார்
கடுவனைய கொடுவிழியார் கலைகளையுங் கடைசியரே. (எ)

உண்டொருவன் சிவனமல னுயிரினூரு மெனவுணர்ந்த
பண்டிதர்கைத் தா(ர)மெனப் பலவிதசா லியும்விளைதல்
கண்டுழவர் கடிதரிந்து கைச்சிறுவா ளாலவற்றைத்
திண்டிகழுங் கனகவரை யெனப்பலபோர் விதஞ்செய்தே (அ)

ஏர்க்காலான் மிகிப்பித்தே போர்விதம்வை யெடுத்தடக்கி
நீக்காவெண பதடிநவ மணிவரைபோ னெற்குவித்தே
வாக்காலே புகழுநர்க்கும் வறியவர்க்கு மகிழ்ந்துதவி
நாக்காலே நயமுரைத்து நிறைப்பர்மனை தொறுநயந்தே. (௯)

வேறு.

இத்தகைய திருநதியின் கரையின்பா லிலங்குமல ரோன்
ஞான்ற,வுத்தமர்நால் வருமவர்பா லுதித்தவநு லோமரொடு
பிரதி லோம, ரத்திறத்தோவ் வாவந்த ராளிகரும் விராத்தியரு
மடைவிற் றநகு, நத்தமக ரம்பாடி நகர்புரமென் றியம்புபெய
ரருணை நாடே. (௧0)

வேறு.

ஆடகத் தாருங் காள மதிர்முழ வாதி வீணை
கோடமைக் குழலும் யாழு மியம்பிடக் கோதை மாதர்
பாடிநின் றாட வெந்தை பசுபதி முதலோர்க் கெல்லா
நாடொறும் விழவு மல்கு நகர்வித மருணை நாடே. (௧௧)

கனகமுங்கொடுத்துக்கொள்ளுங்கன்னிகைகணிகையென்றே
பனுமியல் பார்த்துக் கன்னி பாணிதா னத்தாற் பற்றி
மனமிரண் டற்ற வந்த மாதருந் தாமும் வைகிச்
சினமறுத் தறத்தைச் செய்வாரீ திகழ்பதி யருணைத் தேசம். ()

பொருந்திய காலந் தன்னிற் போதுசூட் டினனல் லாரைப்
பரிந்துபெற் றெடுத்த தந்தை பாங்குறப் பயந்த பாலர்
பெருந்துறை யாக வேத முடன்பிறந் தாரு மென்றெண
ணருந்ததி கற்பி னூர்வா ழணிநக ரருணை நாடே. (கங)

மைந்தரை யில்லார்க் கில்லை மறுமையு மென்றே யெண்ணி
யந்தமா தியுமி லாவெம் மமலனின் னருளாற் பெற்ற
மைந்தரைத் தாங்கித் தாயர் மகிழ்ந்துபா ராட்டு மோசை
யந்தரத் தார்க்கு மின்ப மாக்கிடு மருணை நாடே (கச)

மன்னிய மாட நீடு மாளிகை சூளி கைக்கண்
கன்னலுங் கனியுங் கண்டும் போன்மொழி கன்னி மாத
ரன்னையெவ் வுயிர்க்கு முண்ணா முலையுமை யென்றம் மானை
நன்னயம் பாடி யாடு நகர்திக ழருணை நாடே. (கரு)

ஒருமுத லிருவர் தேடு முக்கண னன்கு வேத
மருளின னணைடொன் றற்கு மருளிரு நாழி நெல்லாற்
றருமமெண் ணான்கு மோம்புந் தாயுமை சரணம் பாடித்
தெரிவைய ருச லாடுந் திகழ்பதி யருணைத் தேசம். (கசு)

அந்தணர்க் கன்ன சாலை யாதுலர் மருத்துச் சாலை
வந்தவ ரெவர்க்கு மன்னம் வழங்கிடு மடமு மோங்கச்
சந்தத மன்ன பானந் தாணியந் தனமுஞ் சாலச்
செந்தமி ழோர்க்கு மீவார் திகழ்பதி யருணைத் தேசம். (கஎ)

வணங்குவர் மண்ணோர் கண்டான் மன்னவன் புதல்வன் றன்னைக், குணங்குண மின்மை நாடார் கூற்றினைக் குழைத்தான் சின்ன, மணிந்தவர் தம்மைக் கண்டா லவர்குணஞ் செயலா யாதே, யணங்கெதிர் கொள்ளு மன்ப ரணியுள தருணை நாடே. (கஅ)

அறிந்தமர் வாசி யென்று மன்னியர் மனையுண் பார்வாய்
திறந்திட விருப்புத் துணடப் புட்களும் பிடுங்கித் தின்று

மறந்துமன் னியர்சோ றுண்கை வழுவற மௌனம திந்துச்
சிறந்ததம் மனையி லுண்பார் செழுநக ரருணைத் தேசம். (கசூ)

தனத்தினைப் படைத்து மன்ன தானமும் புரியார் தம்மைத்
துனைத்தெழு தருமன் றூதர் தூண்டிலிட் டொறுப்பர் மற்று
மனத்துயர் செய்வர்கண்ட ராதலான் மகிழ்ந்தன் ஞதி
தினத்தின மருத்து மென்பர் திகழ்பதி யருணைத் தேசம். (உ0)

ஈர்ந்துட லுயிரு னுண்ணு மிழுதையை யெரிபோல் வெ
ய்தாய்க், கூர்ந்தருள் ளிலவிற் கோத்துக் குறைப்பரீர் வாளா
லென்றே,யோர்ந்துயி ருடலைக் கோற லூனுண லெனுமி ரண்
டுந்,தீர்ந்தவர் சிறந்து வாழுஞ் செழுநக ரருணைத் தேசம்.(உக)

ஆலய மமலற் காக மதனுயி ரிலிங்க மென்றே
பாலக ராகித் தாமே பல்லுயி ரினுக்கும் வேதத்
தேனுமா யாகத் தல்லா லுயிருட லீர்தல் செய்யாச்
சீலர்கள் சிறந்து வாழுந் திகழ்பதி யருணைத் தேசம். (உஉ)

சின்மயன் சிவன்பொற் கோயிற் செம்பொனுங் கவர்ந்த
தீம்பன், வன்னியின் வீழ்ந்து வேவன் மற்றைய நரகந் தோ
று, மிங்கிலே யுறுவ னென்றெம் மிறைபொருள் சிறிதுங் கொ
ள்ளாச், செங்நெறிச் சில ரென்றுந் திகழ்பதி யருணைத் தேசம்.

அன்னியன் மனைவி யாக மணந்தவ னயோம யத்த
வன்னியின் பாவை தன்னைத் தழுவிவெந் துருகி வாடு [யாச்
மென்னுநூ லெண்ணி யென்றும் பிறனிலா ளிணைத்தோ டோ
செங்நெறிச் சிலர் வாழுஞ் செழுநக ரருணைத் தேசம். (உச)

தந்தைதாய் குரவன் றூளிற் றாழ்ந்தவ ரேவல் செய்யா
மைந்தர்கண் முகத்தி லெய்தி மல்குமங் குசத்தாற் றூதர்
கொந்துவ ரென்றே யஞ்சிக் குறைந்தவ ரேவல் செய்து
சிந்தனை மகிழ வாழ்வார் திகழ்பதி யருணைத் தேசம். (உரு)

முற்றவந் தோறுஞ் செய்து முற்றுநல் வினையி னாலே
கற்றநூ லினைத்தக் கோர்க்குக் கருணையா லுணர்த்தார் வேட
ரெற்றிடு வனத்து நச்சு மாமர மாவ ரென்றே
நற்றவர்க் கருளிச் செய்வார் நகர்திக ழருணை நாடே. (உசு)

உதித்துநின் றொடுங்கற் கூக மற்றுமா யிநா டோறு
முதித்துநின் றொடுங்குங் காயத் துண்டுதெ யாதி செய்வான்
மதித்திடி னவன்வே றல்லன் மலமிலி மலாரி யென்றே
திதப்படத் தெருண்ட சித்தர் திகழ்பதி யருணைத் தேசம்.(உஎ)

கருக்குழி விழாம லீசன் கழலடி நீழல் சேர்தற்
கொருப்படு முளத்தார் தாழ்ந்தே யுதவிய கனகம் வாங்கி
விருப்புடன் விமலன் கோயில் கோபுரம் விமானம் வேறுந்
திருப்பணி செய்யுஞ் சீலர் திகழ்பதி யருணைத் தேசம். (உஅ)

தந்தைதாய் புதல்வர் பாரி தம்முடன் றோன்றி னோரும்
பந்தமென் றவரை விட்டுப் பசுபதி பாதந் தன்னை
யைந்தையு மடக்கி யந்தக் கரணமு மார்வங் கூரச்
சிந்தனை செய்வார் சேருஞ் செழுநக ரருணைத் தேசம். (உகூ)

மயலிலார் மனத்தின் வாக்கின் வழுவிலார் வடிவந் தன்னி
னியலுளே புகழுங் கண்டி யிணையலா லணியு மில்லா
ரயலிலா ருறவு மில்லா ரறிவினுட் சிவனு லன்றிச்
செயலிலார் செறிந்து நீடுஞ் செழுநக ரருணைத் தேசம். (௩௦)

திருநாட்டுச்சிறப்பு முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சுஅ.

# திருநகரச்சிறப்பு.

செப்பியவித் திருநாட்டிற் சிகரமென வருணகிரி திகழ்ந்து நீடு, மெப்பொழுதும் பரமசிவ னுலகுய்ய விதுதன்னி லிலங்க லாலே, முப்பொழுதும் வானவரு முனிவருமே னையருந்தம் முடிசாய்த் தேத்தத், தப்பறவே யவர்விரும்பும் வரமருளு மகிழ்ந்திருந்தச் சயில நாதன். (க)

பூவலயத் துளவளவில் சிவபுரியு ளிதுவாமற் புதவெற் பென்றே, தேவர்களுந் தொழுமிந்தத் திருவண்ணு மலைப்பூர்வ திசையின் வேத, நாவினர்மன் னவர்வசியர் சூத்திரரு மறைறையரு நயந்து நீதி, மேவியுறை யும்வியனூர் புரியொன்றுண் டதன்வளத்தை விளம்ப லாமே. (உ)

இருகரைக்குந் திருக்கரத்தா லெறிந்தகில்சந் தேலமில வங்க மாதி, யருவினைக ளனைத்துமறத் தாடுநருக் கிட்டவர மருள்சோணு, பெருகுநிறை நதிபுரிக்குத் தென்றிசையிற் பருகுநர்க்குப் பிணியுந் தீர்க்கும், குருமணிகள் தொழித்தயலிற் குளநிறைத்து வயலனைத்துங் கூடி யோடும். (ங)

செஞ்சாலி பொற்சாலி திருவரங்கன் சிறுசம்பா வாதி யெல்லா, மெஞ்சாதே விளைவயல்க ளெண்டிசையு முளவங்கே யிலவு வாயார், நஞ்சாரும் விழியிணையார் நறும்பால்கன் னலுமென்ன நவிலுஞ் சொல்லார், மஞ்சாரு மிருளளக வுழத்தியர்வா னவர்கோனை வாழ்த்து வாரே. (ச)

வேறு.

வருக்கையுட னுசினிதே மதுகம் வருளாதி
தருக்கிளரும் பொழிலெங்குந் தாழையிள நீர்க்குலையைப்
பரித்துநெருக் கியவனமும் பாளையொடு பசுந்தாறு
தரித்துவளர் பூகநிரை தானுமுயர் வானிலவும். (ரு)

வாழைவனந் தாழைவன மெனவளர்ந்து வானிலவும்
வேழவனம் பூகவன மெனவோங்கி விண்டடவு
ஞாழலொடு கணவீரஞ் சாதிமுல்லை நந்திவட்ட
மேழிசைவண் டமாமயிலை யாதிவனங் களுமெங்கும் (எ)

பங்கயவா விகளெங்கும் பைங்குவளை யோடைகளு
மங்கவுடற் பிணியினையு மவலவினை யனைத்தினையு
மிங்கிவணே விழுங்கிருளை யொருகணத்தில் விலக்கியிடுஞ்
செங்கதிரோனெனத்தீர்க்குந் தீர்த்தமுமுண் டெண்டிசையும்

ஆய்ந்தறிய வேதவிதி யந்தணர்கள் கலிவலிதான்
மாய்ந்திடவே மதித்துமழை பெய்யுமகம் புரிசாலை
யேய்ந்துளவெங் கணுமன்பர் லீவர்கள் பலரவர்பாற்
றோய்ந்திடினே சிலரிரப்பர் ரவர்க்கிரங்குஞ் சிந்தையினால் (அ)

போதனுமா தவனுரனும் புரந்தரனு மற்றையரும்
வாதையறத் தமக்கிட்ட வரமூர்க்கை மலரேந்தி
யாதிநடு வந்தமிலா வமலனளப் பரியனவன்
பாதமல ரருச்சித்த வாலயமும் பலநிலவும் (௯)

ஐந்துகரத் தானமுகங்க ளாறுடையா னடலவேலி
சுந்தரத்த சாத்தாத்தோ லாத்தாக்கை வயிரவற்குஞ்
சிந்துகிர்த தினகரற்குஞ் சிறப்புறுமா லயம்பலவுந்
தந்தமக்கு விதித்ததலந் தனினிலவுந் தகைமையினால் (க0)

வேறு

ஏராருந் திருவீதி பலவிசைய நாற்றிசையு மிடையி னெங்கு
நாராச முற்றமுழங்க நாலுவாத்தியங்களுந்தேர் நடைமா வூரும்
போராரும் புரவலரும்பூசுரரு மற்றையருமபொதுளிப் போதச
சீராருந்திருவணுமலைப்புரிதானென்றுஞ்சிறந்து நீடும்

**வேதவொலி தாளத்தின் சதிவீணை மழலைமொழி வெண்சங் கோசை, கோதையர்கள் கீதவிசை குடமுழவம் பேரிசை**

கொக் கரையின் கோட,மாதிநடு வந்தமிலா வமலனருளால் வேத மாதி யாய்ந்தா, ரோதியபா டலின்பண்ணு மும்பருல கினும்புகுந்து நிறைந்தே யோங்கும். (கஉ)

மறையவரு மன்னவரும் வசியருஞ்சூத் திரருமுறை வழியி ஞலே, முறையுறசூழ் மாளிகையின் சூளிகையின் முகடு தொறு மொய்யோ டேற்றே, யறையுமணி களுமணிந்தே யாதப த்தால் வருந்தபன முயிர்கட் காற்ற, நிறைகதிரைத் தகைவன போ னிரந்துகொடி விதம்வானி னீடி யோங்கும். (கங)

நீடுகொடி விதமவைதா னின்மலனைச் சின்மயனை நிரந்த முன்னு, ஞடியிடு மயனரிமுன் னெள்ளழலா யோங்கியவர்க் களப்பொண் ணுனை, வாடியவர் தொழவருளுந் திருவண்ணு மலையானை வணங்க வம்மி, ஞடகநா டாள்வாரே யென்ற வரை யழைப்பனபோ லசைந்தே யாடும். (கச)

தாளநிகழ் சதிகாளந் தருமழலை சங்கினொலி யாதி தங்க, வேளனைய வியனுருவர் முறையாலே வேதவிதி வினையி னிற் கும், காளையர்க ளாதிநிகர் கன்னியர்கை யினைத்தானக் கட ஞற் பற்றி,மூளுமழ லினைவலஞ்செய் மனைகளுள பலமுழங்க முன்னும் வேதம். (கரு)

தப்பறவே வேதாதி தனையுணர்ந்தோ ரோருயிரோர் தனு விற் றங்கி, யெப்பொழுது மின்பொடுதன் பனுபவிக்கு மெ ன்றெனுவா ரவர்க டாமே, யிப்புரியு ளோருயிர்தா னிரண்டு டலி னுண்டுகொலென் றைய மெய்த, வொப்புடைய மனத் தினராய்ப் பாரகர்பா ரியர்வாழு முறையு ளெங்கும். (கசு)

புத்திரரை யில்லார்க்குப் புத்தியுமுத் தியுமிலையென் றம லன் றனை, வித்தகனை யருணகிரி வெற்பினனைப் பணிந்தவ ளின் னருளாற் பெற்ற, புத்திரரைப் புனையிழையார் மாளி

கையின் சூளிகைமேற் புகழு மோசை, சித்தமகிழ் வுறக்கேட்டுத் திவ்விதலத்துத் தேவருமா தரவு செய்வார். (கஎ)

வேறு

கரும்பனையார் மொழியதனாற் கயலனையார் கண்ணிணையா
லரும்பனையார் முலையதனா லரவனையா ரல்குலினாற்
சுரும்பமருந குழலவிழ மாளிகையின் சூளிகைமேற்
கரங்களினாற் கழல்பந்தம் மானைபயில் கன்னியரே. (கஅ)

பொருவிழியாற் கயலனையார் புணர்முலையான் மலையனையா
சுரிகுழலா லிருளனையார் துடியனையா ரிடுகிடையா
லுருவதனாற் றிருவனையா ரூசன்மிசை யுகந்தேறி
யருகியநுண் ணிடைதுவள வசைந்தாடு மரிவையரே. (கக)

இல்லையென வுளதென்ன வையமுறு மிடுகிடையார்
முல்லைமுகை நகையல்ல வெனத்திரிவா முறுவலினார் [யார்
வில்லியர்கைக் கணையலக்கண் ணெனத்தெளிவாம் விழியிணை
மல்லன்மனை தொறும்வள்ளை வாக்குறநெற் குறுமடவார். ()

வட்டமதி நிகர்முகத்தார் மதர்விழியார் மணிநகையார்
பட்டணிந்த வல்குலினார் பாடகஞ்சேர் மெல்லடியார்
கட்டுவடக் கனதனத்தார் கவின்பொன்னாண் கந்தரத்தார்
சட்டுவத்தா லன்னமருந் தவர்கரத்திற் றூழ்ந்தளிப்பார். (உக)

அருந்தவர்க்கு மந்தணர்க்கு மன்னமருந் திடுஞ்சாலை
வருந்திவழி வருவார்க்கும் விருத்தர்க்கும் வறியார்க்கும்
பரிந்தருத்தோ தனசாலை பாணியப் பந்தர்களுந்
திருந்தியுறுந் திருவீதி தொறுநிறைந்து சிறப்புடனே. (உஉ)

பாதிமதி யனநுதலார் பரதவர்சேர் பருவத்திற்
காதிவரு மதிமுகத்திற் கயலிணைபோற் கண்ணிணையார்
சாதிமயிற் சாயலினார் தளவமுகை யிளநகையார்
மேதகைய வாய்பவளங் கொண்டமின்னெனு மெல்லியரே. (உங)

நஞ்சனையார் விழியதனு னடையதனற் பிடியனையார்
மஞ்சனையார் குழலதனன் மயிலனையார் சாயலினன்
வஞ்சியிளங் கொடியனையார் வழங்கிடையான் மலரடியாற்
பஞ்சினினர் நதியிதனைக் கொண்மினெனும் பாவையரே. ()

முருக்கிதழ்ச்செவ் வாயினையார் முதிர்ந்தகதிர் மதிமுகத்தா
ரருக்கனிகர் படவொளியா ரம்பனைய வம்பகத்தா
ருருக்கியொளிர் செய்யபொனுக் கொத்ததிரு வழகுடையார்
வருக்கைதே மாங்கனியுங் கொண்மினெனும் வல்லியரே. ()

தண்மதியி னிளநுதலார் தாளகிக ரிளநகையார்
கண்மயிலின் சாயலினர் கலைநிறைந்த மதிமுகத்தார்
பண்மலிந்த வின்சொலினர் படவரவத் தல்குலினர்
கொண்மினறு நெய்தயிர்பால் கோபால குலத்தினையார். ()

மறுமதியென் றதுமாற்றி மலர்க்கமலத் தினைமுகத்தா
ரறுபதஞ்சே ரளகத்தா ராடரவத் தல்குலினு
ரிறுமிடையென் றிரங்காதே பணைத்திலங்கு மிளமுலையார்
கறுவிதுதே னிதுகொண்மின் வம்மினெனு நாரியரே. (உஎ)

ஒப்பரிய மருதநிலத் துளபண்ட முல்லைவள
மப்புவரி தனிலுதித்த வரும்பொருள்வெற் பகிலாதி
யெப்பொழுது மாவணவீ தியினிறைந்தி லங்குதலா
லிப்புரிதா னின்னதினை யெனத்துணையா ரியலோரும்.(உஅ)

பரித்ரமுனை யுடனேருறும் பண்ணியபுண் ணியத்தாலே
தரித்துடலந் தனையிந்த வருணகிரித் தலந்தன்னின்
விருப்புளுற வருணகிரி விமலனமர் திருக்கோயிற்
றிருப்பணியைச் செயுமடியார் மனையெங்குஞ் சிறந்திலங்கும்.

பொன்னனையா ருருவதனற் புயலனையா ரிருள்குழலாற்
கன்னலென வமிர்தென்ன வுள்ளையின்கர மாமுரன்றே

நின்மலன்ற னிவேதனத்தின் பொருட்டுயர்நெற் சாலைதனிற்
செந்நெலினைக் குறுமடவா ருறையுள்ளுஞ் சிறந்திலங்கும். ()

முத்தனைய முறுவலினார் முளரிமலர் நிகர்முகத்தா
ரத்திரம்போ லம்பகத்தா ராடரவத் தல்குலினார்
வித்தகன்வே தகன்விளம்பும் பாதவியல் விதிவழியே
சித்தமகிழ் வுறநடஞ்செ யரங்கெங்குஞ் சிறந்திலங்கும். (௩௧)

வேளனைய வெழிலுடையார் வெற்பனைய மற்புயத்தார்
பாளைபுனை குஞ்சியினார் பாரசவ ரெனும்பெயரார்
தாளைமுதற் கருவியினைத் தாமுழக்கித் தமையன்பா
லாளருணை கிரியானை யடிபணிவா ரகமெங்கும். (௩௨)

வேறு.

தேசிகன்கைத் தெண்டுசிவன் றிருமுன்னே தந்தலைமேற்
றீண்டப் பெற்றே, வாசமுறு நீறணிந்து கண்டிவடம் பூண்டு
ரைத்து மஞ்சட் காப்பு, மீசனிணைத் திருவடியை நாடோறுஞ்
சிந்தித்தி னேந்தித் தம்முட், காசகடிந் திலங்குமுருத் திரக
ணிகை மார்மனையுங் கவினார்ந் தோங்கும். (௩௩)

வேறு.

ஒறுத்தார்கள் புலனைந்து முறவுபகை யெனுமிரண்டு
மறுத்தார்க ளவனிதனி லாக்கையொடு வாழ்க்கையினை
வெறுத்தார்கண் மெய்க்கணிந்து வெண்ணீற்றைக்கண்டிவடம்
பொறுத்தார்கள் சிவபூசை புரிமடமும் பொதுளியுறும். (௩௪)

தரித்துரத்திற் கண்டிவடந் தனைத்தவள நீறணிந்து
பரித்துளத்தி னருணகிரிப் பரமசிவன் பாதமலர்
குருத்தமதி பொதிசடையான் றிருக்கோயில் கேள்விகுளிர்
கிருத்தகுநன் மடந்தானுஞ் சிறப்புடனே திகழ்ந்துறுமே. ()

உடல்சிறையென் றுவர்த்திடலு மொழிப்பனுயிர்க்கொப்பரிய
கடவுளவ னருணகிரி நாதனெனக் கருத்திலெணி

யடிகளம ராலயத்திற் காரியங்க ளாராய்ந்து
திடமுறவே செய்விப்பார் திருமடமுஞ் சிறந்துறுமே. (௩௬)

ஓதியரு மறைநான்கு மொளிரங்கி தனையோம்பிப்
போதினொடும் புனலினொடும் புரிந்தமல னடிப்பூசை
மாதவர்க்கு முச்சிதனில் வந்தவர்க்கும் வறியவர்க்கு
மாதலர்க்கு மனமருந்து மருமறையோ ரகமெங்கும். (௩௭)

வேறு.

இருமூன்று மெழுநான்கு மீரிரண்டுந் திரிவைய மறவே
யெண்ணி, யொருவாதே யுயிர்க்குயிரா யுறைவானை யுயிர்க்
கூடன மொழிப்பான் றன்னை, மருவாரும் பொழிலருண மலை
யானை நறுங்கொன்றை மாலை யானைப், பரிவாலே யருச்சனை
செய் பண்டிதர்வாழ் மனைகளுள பலவே பாங்கால். (௩௮)

வேறு.

அன்னமிரப் பவர்க்கொளியா ராய்ந்தியன்முற் றறிவொளியா
ரின்னலினைப் புரியாரே யேதிலர்க்கிப் புரியாரே
கன்னலென மொழிவாரே கரிசனைத்து மொழிவாரே
யுன்னதந்தா முரையாரே யுணர்வுதவு முரையாரே. (௩௯)

ஊணினைக்கைத் துண்ணாரே யுடையாரே யுண்ணாரே
வாணினையு மதியாரே மறவாத மதியாரே
தானனைத்து மானவனைத் தமியனையெம் மானவனை
யானெனதென் றுன்னாரே யானேயென் றுன்னாரே. (௪0)

தானவினை புரிவாரே தவநெறியே புரிவாரே
யீனவினை விழையாரே யெழிலுடைய விழையாரே
மானமனத் துள்ளாரே மறத்தைமனத் துள்ளாரே
வானிலவு மிசையாரே மலினரன மிசையாரே. (௪௧)

கல்லாரைக் கணியாரே கற்றவருக் கணியாரே
சொல்லாருஞ் சுவையாரே சொல்லலாற் சுவையாரே

நல்லாரைச் செறிவாரே நமனைக்கைச் செறிவாரே
யெல்லார்க்கு மினியாரே யிணையிவருக் கினியாரே. (சஉ)

வேறு.

மதித்துரையா விப்புரியின் மேல்பாலின் வானவர்மண்ணவரு முய்ய, வுதித்தொளிரு மோங்கலின்கீழ் திசையினடிவாரத்தி னிலவி யோங்குங், குதர்க்கமற விதர்க்கமுற வேதமுங்கூ றியவிமலன் றனித்த கோயில், விதித்திறத்தா லியற்றவிய னுறவிளங்கு மதன்சிறப்பார் விளம்பு வாரே. (சங)

மண்டிகழுந் திருநடமா ளிகைமதிலும் வானவரு முனிவர்தாமு, மெண்டிசையி னுள்ளோரும் வீழ்ந்துதொழு தேத்தியிட விலங்கா நிற்குந், திண்டிகழுங் கோபுரமுந் திண்கூடத்திருக்குளமுஞ் சிறந்து கீழ்பா, லுண்டுபல வவற்றினுள சிறப்பதனை யாவர்விரித் துரைக்க வல்லார். (சச)

வேறு.

கண்ணில்லார் காணார்கள் கடவுளரு ளாகமத்தை
யெண்ணில்லார் நித்தியநை மித்திகமு மெண்ணாரென்
றண்ணலரு ளாகமநா லேழினுக்கு மருச்சனையைப்
பண்ணியிடு மாகமபண் டாரமும்பாங் குறவிளங்கும். (சரு)

கருணையுள்ளார் நால்வேதங் கற்றெழுநான் காகமமும்
பொருணயந்தா ராய்ந்தைந்தின் புலன்களைந்த போதகத்தார்
தருணமதிச் சடையானைத் தற்பரனைச் சதாசிவனை
யருணகிரி நாதனைமுப் பொழுதுமுகந் தருச்சிப்பார். (சசு)

காலையினும் புனன்மூழ்கி விதிமுறையிற் கடன்முடிப்பார்
நூலணிமார் பினர்சிரத்தி னுதன்மார்பு புயங்களத்தும்
பாலனைய நீறணிவா ரருணகிரிப் பகவனடி
வேலைதொறும் பணிந்துவியன் மறைவிளம்பும் வேதியரே. ()

கனிமனத்தார் கண்டிதிரு நீறணியுங் கடனுடையார்
புனிதவதி சம்பந்தர் வாகீசர் முதற்புலவர்
மனிதருய மறைப்பொருளைத் தொகுத்திலக்கும் வாக்கியலை
யினிதிசையா லருணகிரி நிருமலன்முன் னிசைப்பாரே. (சஅ)

நெற்றியினீற் றினையுடையா ரருணகிரி நினைவுடையார்
கற்றுணர்ந்து பரதமுதற் கலைதானங் கரதலத்திற்
பற்றிநடம் பயில்விப்பார் பாரசவர் பாங்குடைய [ன்றே.
பொற்றொடியார் தமைப்பொருவில் போதகனின் னிசைபுக

ழடியனையார் பிடியனையார் துவளிடையா லடிநடையால்
விடமனையா ரமுதனையார் விழியதனுன் மொழியதனல்
வடமனையார் வயிறதனன் மலையனையார் முலையதனு
லடிகளது திருமுன்னே நடம்புரியு மரிவையரே. (ருo)

மானனையார் விழியினையான் மதியனையார் முகமதனுற்
றேனனையார் மொழியதனுற் றிருவனையா ருருவதனு
லானனங்க ளைந்துவிழி யைம்மூன்றோன் சந்நிதிமுன்
றானதனு தானதனு வெனப்பாடுந் தையலரே. (ருக)

பண்ணனையார் மொழியதனுற் பணையனையா ரணிதோளாற்
கண்ணிணையாற் கயலனையார் கவின்வாயாற் றுவரனையார்
தண்மதியந் தனையனையார் தம்முகத்தாற் றழனெற்றிக்
கண்ணனருட் டிருமுன்னே நின்றுடுங் கன்னியரே. (ருஉ)

விதியாலே யாகமத்தி னித்தவிழாத் திங்கள்விழா
மதியாலே பணிக்குரியார் மண்டலமு மற்றுமுள
பதியான மூவர்க்கு மருணகிரிப் பரன்றன்னைக்
கதியார்க்குங் காட்டியருள் புரிவானை யடியணைந்தே. (ருங)

திருநகரச்சிறப்பு முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஉக.

# அருணாசலோதயச்சருக்கம்.

கருவுரு வினுமுள கவலைகள் களைவா
னருவினை யொடுமத னநுமுத லரிவா
னிருமல னிணையடி நிழலினை யடைவான்
பரிவொடு கரிமுக னடியிணை பணிவாம். (க)

வேறு.

கருணாசல னிமையோர்தொழு கயிலாசல னியலாம்
வருணாசல மறைஞானிசண முகன்வாரண வதனத்
தருணாசல னெனுமூவரைச் சமைத்தானெமைத் தடுத்தா
னருணாசல னமருந்திருக் கோயிலெம தறிவே. (உ)

பெருந்தாரணி தனில்வந்தினிப் பிறவாம்வினைப் பிணியும்
பொருந்தாதுபுக் கிருந்தேசிவ புரஞ்சிற்புரி புகுவா
மருந்தாருயிர் மலநோய்க்கொளி யருணாசலன் மயமா
மருந்தாமுலை யடிநாடொறும் பணிவாமுடி யணிவாம். (ங)

வேறு.

பகர்ந்தனம்பா யிரத்தொடுமன் டலவளமும் பதிவளமு மயன்கற் பாந்தத், தகம்பரமென் றலுமயங்கி யரியுமகம் யா மென்றன் றாடல் கண்டே, திகழ்ந்தமலன் செந்தழலா யள ப்பரிதா யவர்க்கவர்தஞ் செருக்கைத் தீர்த்தே, யுகந்தவர்செய் பூசையுல குயவருண கிரியெனவிங் குறைதல் சொல்வாம்.(ச)

சிறந்துதிகழ் நைமிசா ரணியத்தைச் சேர்ந்தனன்சின் மய னை யுன்னி, யறம்பொருளின் பொடுவீடு மாராய்ந்த சூதமுனி யப்போ தங்கே, யுறைந்தவருந் தவரெதிர்கொண் டுத்தமநின் வரவுமினை யுடலி னாலும், பிறந்தவறத் தால்விளைந்த பெரும் பயனென் றதிமதுரம் பேசி னாரே. (ரு)

அஞ்சியவ ருரைமறுக்க வல்லுளித்த வாதனத்தி னமர்ந்து சூதனெஞ்சினினைந் தமலனடி நிகழ்த்தியிருமூன்றெழுத்து *

---

* இருமூன்றெழுத்து - தாரகபஞ்சாக்ஷரம்.

நேச முற்று, னெஞ்சலிலா வருந்தவர்க ளப்பொழுதுன் னரு ளாலே யெணினேமீசன், விஞ்சையருந் தொழவுலகம் விள ங்கவுறை கின்றபதி விதங்க ளெல்லாம். (சு)

அருணகிரி வரமினியா மறிதற்கா தரவுடையோ மநக வென்னக், கருணையனைப் பதுகயனைக் கழல்பணிந்து சனக முனி கரிசு தீர்ந்து, பரமசிவன் பதமடைதற் கெளியநெறி சிற்றுயிர்க்குப் பகரா யென்ன, வருணகிரி நினைவார்க்கா மப் பலமென் றயனறைத லறைவா மென்றான். (எ)

வேறு.

செனகனே யண்ட மெல்லாந் தேசனே தேசி னாலே
யனகனே யறங்க ளாதி யறிவனே யயனே யன்பர்
நினையுமாத் திரத்திற் பாவ நீக்கிமே லாக்கி யீசன்
வனசத்தா ணீழல் வைத்தற் கேதுவாந் தலஞ்சொன் மன்னே.

என்றுசத் தியலோ கத்தி னிறைஞ்சியே சனகன் கேட்ப
நன்றென நயந்து வேதா நவின்றிடு வாங்கே றானு
மன்றியே யரியு மோகித் தகம்பர மெனலுந் தீயாய்
நின்றவ னருண வெற்பை நினைந்தவர் முத்த ராவார். (கூ)

என்றியம் புதலு நீர்தா மிகலிய வாறு தானென்
னன்றர னழலா யோங்கி நுஞ்செருக் கரிந்த வாறென்
னின்றவை தனைவி ளங்க வெனக்கருள் செய்யென் றேத்தப்
பொன்றிக ழுருவி னானும் பரிந்துகேள் புகல்வா மென்றான்.

மண்ணுறு மனித ராண்டு மதித்தநா னூற்றின் மேலே
யெண்ணிய முப்பத் தீரா யிரங்கலி யுகத்துக் கேயு
மண்ணிய துவாப ரைக்கா மதற்திரு குணித முன்னாத்
திண்ணிய திரேதத் தந்தத் திரிரு குணிதந் தேரில். (கக)

இனையநா ளுகமீ ரைஞ்னூ றெமக்கொரு பகலா யெண்ணு
மினையநா ளுகமீ ரைஞ்னூ றெல்லியா யெல்லி தன்னிற்

றனியுறத் துயின்றேம் யாமே சத்திய லோகந் தன்னிற்
பணியுறச் சுவர்க்க மந்தம் பத்துல கினைநீர் கொள்ள. (கஉ)

அப்பொழு தரிதா றேக்கி யறலினு முலகந் தன்னை
யிப்பொழு திதனைக் காப்பா மென்றெணி யிரக்கத் தாலே
மைப்பெரு வரையே யென்ன வல்லுரு வராக மாகி
யொப்பருங் கோட்டின் மீதே நிறுவினா னுலக மெல்லாம். ()

எண்ணிய வுகங்க ளாண்டா யிரஞ்செல வெல்லி மாண்டே
நண்ணனும் பகலப் பேரது நாளெழுந் துலகா சாரத்
தெண்ணிமுன் னவனை விண்ணே யுலகுட லியற்றி னேனுட்
கண்ணிறுற் சங்கற் பத்தாற் கட்டுறுங் காலத் தாலே. (கச)

பண்ணிய வுலகந் தன்னைப் பார்த்திடு வாமென் றெண்ணி
விண்ணொடு மண்ணு மற்றைப் பாதல விதமு நோக்கி
மண்ணிடைக் கடல்க டன்னை நோக்கியே வரலு மங்கே
கண்ணனைக் கமழுந் தீம்பாற் கடலிடைத் துயிலக் கண்டேன்.

ஒழிகதுஞ் சலினைக் கண்ண வென்னயான் றுயங்கித் தானும்
விழிமலர்ந் தென்னை நோக்கி யாவனீ விளம்பா யென்ன
வழிதரு முலக மெல்லா மாக்கிய வயனு னென்றேன் [ண்.
கொழுவிய கோட்டாற் றுங்கிக் குவலயங் காத்தேன் யான்கா

ஆதலி னாலே யானே யதிபதி யுலகுக் கெல்லா, நாதனும் பிதாவு மாவே னினக்குநா னெனனு மிப்போ, தோதிய வுரைமெய் யாமென் றெடுபொரு தெனைநீ வெல்லின், மாதவ வென்றேன் றானும் வருகவென் றெடுபோர்க் கென்றான். ()

கடலிடைக் கணக்கோ போர்வ[?]காசினிதனிலென் றேயான்
படர்தலுந் தொடர்ந்து வந்து பரந்கண் டத்திற் கூடி
விடமன சாத்தை யென்மேல் விடுத்தன னவனப் போதே
பொடிசெய்தே னதனை யானுங் குசையெனும் புல்லைவிட்டே.

எறிந்தனன் முசலம் பின்னை யான்விடுஞ் சூலத் தாலே
முறிந்தது முசலந் தானு முறிதரத் திகிரி தன்னை
யெறிந்தனன் பிரம மென்னு மத்திரத் தினையா னேவி
மறிந்தொடிந் திடவே செய்தே னதனையுங் கண்டம் மாயன்.

அன்றியே யெய்தான் பாசு பதமெனு மம்பு தன்னைக்
கன்றியே மகேச மென்னுங் கணையினை விடுத்தேன் யானுங்
குன்றிட வுலக மெல்லாம் பொருதன விரண்டுங் கூடிச்
சென்றிடத் தேவ ராண்டு திவிதலத் தேவர் நொந்தார். (உ0)

ஊடியே யாஞ்செய் பூச லாலுல கொடுங்கல் கண்டே
வாடியே வானோர் கோனும் வளரொளிக் கயிலை புக்குப்
பாடியே வேத மீசன் பதம்பணிந் தயன்மா றம்மி
லூடியே பொருகின்றார்க ளுலகம்வெந் தொடுங்கு தென்றான்.

கடுந்தெழு விடத்தை யுண்டெந் தலையினைக் காத்தாய் வானத், தடர்த்தெழும் புரங்கண் மூன்று மரித்தெமக் கருள் செய் தாண்டாய், தடுத்தவர் பூச லிந்தச் சகத்தினைத் தாங்கா யென்ன, நடத்தொழி னம்பன் றானு நகைத்திது நன்றே யென்றே. (உஉ)

ஊடலை யொழிப்போ மென்றே யுரைத்தவர்க் கெங்கண் முன்
நீடின னளக்க லாகா நெருப்புரு வாகி யப்போ [னே
நாடியே பொருத வெம்போ ரிரண்டுமவ் வொளியிற் புக்குக்
கூடின வதனைக் கண்டற் புதமிது வென்கொ லென்றே. ()

எண்ணிறோ மந்தப் போதி லீசனின் னருளி னாலே
விண்ணிடை வாணி தோன்றி விமலனுஞ் செருக்கை வீட்டக்
கண்ணிவெங் கனலாய் நின்றான் கண்டவ ரிதனந் நாதி
புண்ணியர் சிறப்பை யுள்ள ரென்றவப் பொழுதில் யாங்கள்.

ஊடலை யொழிந்தோ மிந்த வொள்ளொளி யாதி தன்னைத்
தேடியான் காண்பே னென்று திருமகள் கொழுநன் செப்பி

யீடுள வராக மாகி யேழுல கினையுங் கீண்டு
கோடுக ளிரண்டி னாலும் வருடமோர் கோடி சென்றும்.(உரு)

கண்டில னெரிந்துள் ளத்திற் செருக்கினைக் களைந்து மண்ண
ணோர்க், கண்டார்க டமக்கும் யாமே யதிபதி யெம்மை யாள
னா, னெண்டனி மூல மான பசுபதி யென்று ணோர்ந்தான்,
மண்டனைக் கீண்ட கொம்பால் வடிவமு மனமு மெய்த்தான்.

மூலத்துக் குண்டோ மூல மோகத்தி னாலே யாமுங்
காலத்தைக் கடந்த வீசன் கழலடி காண்பா மென்றே
சீலத்தை யநேகந் தன்னைக் கழித்தன மீனே யென்னுஞ்
சிலத்தை யுடைய னாகி மீண்டுமுன் னெல்லை சேர்ந்தான். ()

அன்னமா யானு மப்போ தடைந்துவா னளவில் கால
மின்னலை யுற்றுங் காணே னெரிமயத் துச்சி தன்னை
யென்னையவ் வானிற் கண்டா ரிருடிகள் சிலசித் தேசர்
நன்னிலை நினதென் றங்கே நகைத்தவர் நவில லுற்றார்.(உஅ)

ஆதிநள் ளந்த மில்லா வரும்பெருஞ் சோதி யான
நாதனன் முடியைக் காண நாடினை மோகத் தானீ
யூடிநின் னுடனே பாத மோடியே காண்பே னென்று
தேடிய மாலுங் காணான் செருக்கொழிந் தாங்குச் சேர்ந்தான்.

என்றவ ரருளிச் செய்யக் கேட்டெமக் கிறைவன் றன்னை
யின்றுணர்த் தினரே யென்றவ் விருடிக டமையு மேத்தி
யொன்றியுள் ளிரண்டற் றோங்குமொருவனைச் சிவனையுன்னிப்
பொன்றிடச் செருக்குள் ளத்தின் முன்னைய வெல்லை புக்கே.

கண்டாரி தனையு மங்கே கண்டிலன் கனலி னந்த
மெண்டனை யிறந்த கோடி வருடமுந் தேடி யானு
மெண்டனை யுடைய சித்த ரிருடிக ளென்னைக் கண்டே
யொண்டனி முதலுக் கொப்பி ரிலிதனக் குச்சி யுண்டோ.()

ஆதிநள் ளந்த மில்லா வரும்பெருஞ் சோதிக் கந்தம்
பாதமு முண்டென் றெண்ணிப் பார்த்திடத் துணிந்தா யீதுன்
மாத¶ னி மயங்கி மாலும் வராகமாய் மண்ணைக் கீண்டெய்த்
தாதியைக் காணான் மீண்டே யடைந்தன னந்த வேலை.(௩௨)

ஏணிலா வெண்ணுடியில்லாய் நீயுமீ ளென்றார் நொந்தே
நாணிநான் மீண்டே னென்று நவின்றிட மாயன் கேட்டுத்
தாணுவைச் சிவனை யானென் றருக்கிலார்க் கருளு வானை
நாணகு மலரி னாலு மருச்சனை நயந்து செய்தே. (௩௩)

நீற்றனே போற்றி நீண்ட நெருப்பனே போற்றி கங்கை
யாற்றனே போற்றி யைவா யரவனே போற்றி வெள்ளை
யேற்றனே போற்றி யெல்லா வுயிரையு மீன்றாய் போற்றி
கூற்றினைக்குமைத்துப்பாலன்றனக்குயிர்கொடுத்தாய்போற்றி.

ஒருவனே போற்றி போற்றி யொப்பிலாய் போற்றி யெங்கள்
குரவனேபோற்றிபோற்றிகோணல்வெண்பிறையாய்போற்றி
யருவனே போற்றி போற்றி யருவுரு வானாய் போற்றி
சரவண பவனைப் பெற்ற சங்கரா போற்றி போற்றி. (௩௫)

ஐவகை மெய்ய வத்தை யறிந்தவர்க் கருள்வாய் போற்றி
யைவகை யவத்தை தன்னி னடங்கிடா தமர்வாய் போற்றி
யைவித மான பூத வாகத்து மமர்வாய் போற்றி
யைவகை வேள்வி யாளர்க் கருள்புரி யமல போற்றி. (௩௬)

பெண்ணலா யாணு மல்லாய் பேடியு மல்லாய் போற்றி
மண்ணலாய் வன்னி நீர்கால் வானமு மல்லாய் போற்றி
கண்ணலாய் கருத்து மல்லாய் கலைமுத லல்லாய் போற்றி
யெண்ணலாயெழுத்துமல்லதுயிவற்றின்வே றல்லாய் போற்றி.

மனத்தினுக் கரியாய் போற்றி வாக்கினுக்கெட்டாய் போற்றி
யனைத்துயி ரினுக்குந் தோன்று வருந்துணை யானாய் போற்றி

---

¶ உன்மாதம் - சித்தப்பிரமை.

சினத்தினைச் செற்றா ருள்ளத் திரண்டறத் திகழ்வாய் போற்றி
யெனக்கினி யானே போற்றி யெனத்துதி யிசைத்துநின்றான்.

அவனிவ னென்றே யார்க்கு மறிவரு மமலன் றன்னை
யுவமனு மில்லா தானை யுரையினுக் கெட்டா தானைப்
பவனெனு நாமத் தானைப் பசுபதி தன்னை யானும்
புவனியிற் போகி ஞலும் பூசனை புரிந்து நின்றே. (௩௯)

வரையினை வில்ல தாக்கி வல்லர ணழித்தாய் போற்றி
யருமறை விரித்து நால்வர்க் கறமுத லளித்தாய் போற்றி
கரையிலாக் கடலி னஞ்சை யுண்டிருள் கண்ட போற்றி
செருவினைச்செய்த வெங்கள்செருக்கினைத் தீர்த்தாய்போற்றி.

ஆக்கையை யின்றி யாக்கை யாக்கிடு வானே போற்றி
நோக்கினை யின்றி யெல்லா நோக்கிடு வானே போற்றி
நாக்கினை யின்றி வேத மாதிநூ னவின்றாய் போற்றி
யூக்கமா ருள்ள மின்றி யனைத்தையு முணர்ந்தாய் போற்றி. ()

ஆட்டுவா யெம்மை யாக்கி யடிக்குவாய் போற்றி போற்றி
யோட்டுவா யூனந் தன்னைப் பக்குவ முறினன் பர்க்குப்
பாட்டுவாய் போற்றி போற்றி யவர்தமைப் பரிந்துன் மேனி
காட்டியா ளமையு மென்னக் கடவுளுங் கருணை கூர்ந்தே.

வேறு.

அருக்கரொரு கோடிதிரண் டனையதிரு வுருவொளிர வலை யார் கங்கை, யெருக்கிதழி யிளம்பிறையு முதிர்சடையி லிலங் கியிட வெழின்மா லாகங், கருக்கியவக் கமிடற்றிற் கலந்தி லங்க மழுமானுங் கையில் வைக, வரத்தையருள் கரமபய கரநிலவ வாமத்தும் வலத்தின் பாலும். (சஙு)

விலையில்லா வெண்ணீறு விளங்கியிட நுதலின்கண் மெய் யின் கண்ணுந், தொலையில்லா மூரனகை யொடுதோன்ற முக

மலருங் காதிற் ரேடு, நிலையில்லா வலைநீரி னிகழ்சங்கக் குழை யுமுற நேரின் மார்பிற், கொலையில்லா வாய்த்ததலை யென்பே னக் கொம்பாமை துதைந்து தோன்ற. (சச)

புலியுரியுந் திருவரையிற் பொருந்தவொலி சழலடியிற பொலிய வெம்மை, நலியுமழற் றாண்மயத்தி னடுநம்ப னிடங்கியிட நயந்து நாங்கண், மலரடியின் மலர்தூவி வணங்கி யெமை யாண்டருள வந்தாய் போற்றி, தொலைவிலியே சய போற்றி போற்றிசய தோன்றாத துணைவா போற்றி. (சரு)

எருக்கிதழி யணிசடையா யிரவாடி சயபோற்றி யெங்க ளுள்ளச், செருக்கரிந்த செந்தழலே சயபோற்றி போற்றிசய சிவனே போற்றி, யிரக்கமுடன் பொறுத்தெங்கள் பிழையெ மக்கின் னருள்புரியு மிறைவ போற்றி, கருக்குழியி லழுந்தா மே யன்பரவர் தமையாண்டு காப்பாய் போற்றி. (சசு)

என்று துதி யியம்பியபின் பணிந்தெழுந்தே யெதிரெங்கள் கைகள் கூப்பி, நின்றனமப் போதுகந்து நின்மலனு நேயத்தா லெம்மை நோக்கி, யொன்றியநும் பத்தியினு லுவமையுகந்தோ முமக்குறுதி வரத்தை நீர்தா, மின்றிசைமின் றருவமென வின்னருளா லியம்புதலும் பணிந்தே யாங்கள். (சஎ)

வேறு.

அந்தரத்துள் ளாரவனி பாதாளத் தமர்வாரு
மிந்தவழன் மயத்தால்வெந் திடருறுகின் றரிதனைச்
சந்திரசே கரவருண சயிலமெனச் சமையெனலு
மந்தவழ லினையருண கிரிமயமாக் கினனமலன். (சஅ)

மரியாத மருந்தினையு மனிதர்களுந் தாமருந்து
மொருவாதில் வரைதன்னி லுறவருள்செய் யுலகனைத்துந்
தருவானே யெனயாங்க ளந்தவரங் களைத்தந்து
பரமேச னுலகமுயும் வழியெமக்குப் பகர்ந்திடுவான். (சகூ)

விளங்குமழன் மயமாகிக் கிருதத்தின் வெற்பிதுதான்
வளங்கிளரு மாணிக்க மலையாகுந் திரேதத்துத்
துளங்குமொளிக்கனகவரையெனத்தோன்றுந் துவாபரனாயிற்
களங்கமுறுங் கலியுகத்திற் சிலமயமாங் காண்பார்க்கே. (ருo)

எண்டிசையு முக்கோண முசமாகி யிதுநிலவு
மெண்டிசையி னுள்ளாருங் கண்டுநினைந் தயவெளிதி
னெண்டிசைப்பா லருமிதனை யெதிர்நின்று தொழுதேத்தி
யெண்டிசுழுந் தம்மிதய மலர்த்தவிசி லிருத்துவரே. (ருக)

வேறு.

அண்டத்திற் பார்ப்பினுறுப் பெனமுகமைந் தையிருகை யடியொன் றென்று, கொண்டெட்டுத் திசைமுகத்துங் குளிர்வோமிக் குன்றத்து ளிந்தக் கோலங், கண்டிட்ட முறவுளத்தாற் கைதொழுது பணிந்துகருத் திருத்து வார்கள், பிண்டத்திற் பிறப்பாரோ பிரிந்தமண்ணிங் குறைந்தெமைச்சேர்ந் திருப்பர் பேரார். (ரு௨)

தெரிசித்தா ரிக்கிரியை முன்புரிந்த தீவினைக ளனைத்துந்தீர்வர், பரிசுத்த ராய்நினைந்தார் பாங்குறவே பூசையினைப் பண்ணிஞருங், கரிசற்று நம்புரியைக் கலந்திருப்ப ரண்டமெலாங் கழியு நாளி, லிருளற்றெம் மடியடைவ ரென்றெமக்கின் னருளபுரிந்தவ் வரையு ளேய்ந்தான். (ருங)

வேறு.

நிருமல னிசைத்த வாற்றி னுகந்தொறு நிலவி யோங்கு
மிருநிலத் தினுக்கு மேனை யுலகனைத் தினுக்கு மேது
வரகிரி யிதுதான் மண்ணோ வாரிகொண் டிடினும் வைகுங்
கருவுறு மூலருக் கெல்லா மிதுதனி நிசிகா லத்தின். (ருச)

இலங்குமிக் கிரியி லென்று மிருக்கெழு வாய வேதங்
கலந்திகழ் நாலேழ் மூவா றெனகலி னூல்க ளெல்லாம்

புலன்களை வென்றோர் வந்திப் பொருப்படி புடையிற் றங்கி
மலங்களைத் தினையுந் தீர்வர் மனத்தினிவ் வரையை வைத்தே.

எண்டிசைப் பாலர்பூசித் திலங்கிடுஞ் சிவலிங் கந்தா
னெண்டிசை யினுந்தா னீடு மிவ்வரைக் கேனை யொரு
மண்டிய வாஞ்சை யாலே மகிழ்வுறப் பூசை செய்த
திண்டிக ழிலிங்கந் தீர்த்த விதங்களுந் திகழு மிங்கே. (௫௬)

கன்மயங் காட்சிக் கிந்தக் கிரிகலி யுகத்தி லேனும்
பொன்மலை மணிமா ணிக்கப் பொருப்பழற் பொருப்பு மென்று
ளூன்னுக வொருப்பட் டிந்த விதத்திறைன் றுன்னி னோர்கள்
முன்னுள பாவந் தீர்வர் மூளைப்பிலர் முத்த ராவர். (௫௭)

வேறு.

இதயத்து ளிரணியவெற் பெனவெனுக விக்கிரியை
மதிநெற்றி தனிலொளிரு மாணிக்க மலையெனவே
யுதயத்தா யிரமிரவி யொளியெனவுச் சியினினுக
பதமுத்தி பெற்றிருந்து பரமசிவன் பதமடைவார். (௫௮)

முத்திவித நான்கவற்றுண் மூன்றபரம் பரமொன்றே
நித்தியசுத் தானந்த சத்தியசிற் கன † னிமல
சித்தசலன் சிவனவன்றாள் சேர்ந்திருக்கை பரமுத்தி
யத்தனுல கடைதலவ னருகவனெப் பிவையபரம். (௫௯)

வேறு.

என்றறிந் திந்தத் தூல விலிங்கமெண் ணிடுக வென்றுஞ்
சென்றிடும் போதும் போகந் திளைத்திடும் போதும் பாய
லொன்றிடும் போது நோயுற் றுளைந்திடும் போது முன்மெய்
பொன்றிடும் போது மேலைப் புரிபுகுந் திருக்கும் போதும். (௬)

† கனம் - உருவம்.

வேறு.

இந்த வருண கிரிதன்னைக் கண்டே யிலங்கு மிணைவிழியாற்
சந்தி தோறும் பரிசுத்த ராகி நினையுந் தகுதியருஞ்
சிந்தித் தீய வினையனைத்துஞ் சிவலோ கத்தைச் சேர்ந்திருந்தே
யந்தப் புரியுட் போகவித மனைத்து மமல னருளாலே. (௬௧)

கழிய வனந்தங் கற்பங்கள் கைப்பா ரந்தப் போகத்தை
யொழித லின்றி யப்புரியு ளுறையு மமல னுண்ணோக்கா
லழிய வகரோ யிரண்டற்ற வமலங் காண்பார் தம்முள்ளே
மொழியும்பொருளு‡மடங்கிநோண்முத்தராவர்பின்முளையார்.

சந்தி தோறு மருணகிரி தன்னை'யுன்னுந் தபோதனரைப்
பந்த மறுக்கும் பரமசிவ னிவரென் றெணுவார் பணிவாருங்
கந்த மலரா லருச்சித்தே யன்ன மருத்துங் கருணையரு
மந்தத் தமல னடியடைவர் சிவலோ கத்தி லனுபவித்தே. ()

வேறு.

அறுசுவையோ டிட்டான மருந்தியிருப் பாரருண கிரியி
னலலை,பொறிகளொடு மனமடக்கிப் பூசித்த மலனைமற்றைப்
புனித தானத், துறையுமருந் தவர்க்கொப்பா ரோதனமூட்
டிடினிவருக் குயர்வொப் பில்லா, விறைவனிணை யடியுணர்ந்
தார்க் கிட்டான மருததினருக் கிணையா வாரே. (௬௪)

பன்னுமொழி மந்திரமாம் பசுபதியர்ச் சனையாகும் பாங்
காஞ் செய்கை, யுன்னுதலொப் பரியசிவ னுருநினைவா குந்து
யிலு மொடுக்கி யைந்து, மன்னியனல் லாவமல னடிகண்டுள்
ளசைவற்ற சமாதி யாகு மன்னுபுக ழருணகிரி வட்டத்தின்
மைந்தர்க்கின் மாதர் தாமும். (௬௫)

‡ மொழியும் பொருளுமென்றது - நால்வகை வாக்கின் பகு
தியவாகிய வேத முதலிய சொற் பிரபஞ்சத்தையும், நிலமுத
னாத மீறாகிய பொருட் பிரபஞ்சத்தையும்.

வேறு.

கண்டே தூரத் தவ்வரையைக் காலை தன்னிற் புனன்மூ ழ்கிக், கொண்டே கரத்தி னலர்தனைமுந் தூவிப் பணிவார் கொடுவினைகள், விண்டே யொழியத் தரையோரும் விமலன் புரத்தில் வீற்றிருப்பா, ரண்ட மெல்லா மடங்கிடுநா ளாசற் றமல னடியணைவார். (கூசு)

பிறந்தா ரிந்த வரைநிலவுந் தலத்தி லொருநாட் பிரியாதே, யுறைந்தார் தாமு மொடுங்கினரு மொருவித் திவியுஞ் சிவபுர த்திற், சிறந்தே யிருப்பர் சிலகற்பஞ் செல்லப் பிரிந்தே சிவபு ரத்தைப், பிறந்தே தரையிற் பிறவாத நெறிபெற் றமலன் பத ம்பெறுவார். (கூஎ)

விருப்பா லருண கிரிதொழவே வருவார் வழியின் வியந்தி டினே, யிரித்தே யவல வினையனைத்து மமலன் புரத்தின் புட னமர்வர், பிரித்தே யதனிற் பிறந்துமணிற் பெருமா னருண கிரிதெரிசித்,திருப்பூர்புகுந்தே சிவபுரத்திற் சிவன்று ளடைவ ரிலயத்தின். (கூஅ)

வரமா ரருண கிரிதொழுவா மென்றே வருவார்க ளிடைவ ழியிற், பரிவா லன்ன பானதி யுதவி னோர்கள் படியொருவி, யரனுள் புரிவாழ் வனுபவிப்ப ரவிழொன் றினுக்கா யிரகற் பம், விரவா நிற்க விரைமலர்த்தா டன்னி லிருந்து விருப்பு டனே. (கூகூ)

தேர்ன்றிப் போகந் தொலைதலுமே தரையிற் றோன்றுத் துணைசிவனென், றீன்ற தாய்தந் தையைநீத்தே யிணையி லரு ண கிரியடைந்தே, மூன்று போதும் புனன்மூழ்கி முளரி யாதி மலர்கொய்தே, யான்ற விதியர்ச் சியங்கொடுத்தே யரு ச்சித் தருண கிரியன்பால். (எ0)

பெற்றே யிந்தத் தலமருணைப் பிறங்க வினைக்கண் டருச்சிக்
கப், பெற்ருன் மற்றென் பேறென்றே கருத்திற் பிறழா நிலை
நின்றே, கற்ரு வினைப்போற் சிவனடியிற் கசிவா ரவர்தங்
கருத்தாகந்தே, பற்ரு மவர்மெய்ப் பஞ்சவிதம் பஞ்சபூதந்
தனிற் பதிந்தே. (எக)

ஆக்கிப் புனித வுடலமல னவர்தம் புரியுட் டகத்தவல
நீக்கிச் செலுத்திச் சிவபுரத்தி னிருத்தி நிகரில் போகவிதந்
தேக்கிச் செகத்தைச் சிதைத்திநா ளவர்தஞ்சிற்சத்தியிலின்ப
மாக்கித் திளைப்பித்திவனவர்க்கவரைவைத்தேதனதடிக்கீழ்

அருண கிரியென் பவரொருகாலற்றை யவல வினையற்ரு
ரருண கிரியென் பவர்பலகா லாண்டொன் றுளதீ வினையற்ரு
ரருண கிரியை யகத்திருத்தி யருண கிரியென் பவர்தினமு
மருண கிரிநா யகனருளான் மேலுற் றமல னடியடைவார். ()

வேறு.

கண்டறி யார்க ளிந்த வரையினைக் கண்டார் சொல்லக்
கொண்டுளந் தன்னிற் சந்தி தொறுங்குறித் திடின்முற் பாவம்
விண்டிடச் சிவலோ கத்தின் வீற்றிருந் தமல னுக்கால்
விண்டிரு ளந்தந் தன்னின் முத்தரா குவர்பின் மீளார். (எச)

கண்டிடக் கருதி ஞாரிக் கிரியினைக் காணு முன்னே
விண்டன ரேலா கத்தை விமலநின் னருளி னாலே
மண்டனிற் பிறந்து வந்திவ் வரகிரி வட்டந் தன்னிற்
றிண்டிகழ் விதியாற் பூசை சிவமயச் சிலம்பிற் செய்தே. (எரு)

நீக்கிமுற் கரிசு தன்னை நிருமலன் புரிசேர்ந் தங்கே
யாக்கிய போக பேத மனுபவித் தமலா னந்த
நோக்கினு னீங்கி மூல நோயுல கொழிந்து நாளில்
வாக்கினுக் கரிய முத்தன் மலரடி நிழலின் வாழ்வார். (எகூ)

வேறு.

பெற்றே யருண கிரித்தலத்தைப் பெருமா னருண கிரிவரநூல்
கற்றே யுரைத்து மருணகிரி தன்னைக் கருத்தி விருத்தாதார்
வற்று நதியின் கரையிருந்து மதனீர் மூழ்கன் மாங்குதலு
மற்று ரனைய•ரவர்நரரோ வவல விலங்கா ரணியத்தின். (௭௭)

தூல மான சிவலிங்க மிந்தத் துங்க வரையென்றே
சில ரறிந்தே விதிவழியாற் செய்வர் பூசை தெருளாத
மாலர் தரையின் மலையென்றே மனத்திற் கருதி மதியார்தங்
காலின் மிதித்தே யேறுவருந் தமக்காந் துயரங் கருதாதே. ()

மதியா திந்த வரகிரியை மிதிப்பார் வீழ்வர் வன்னிதனின்
விதிநூ லுணர்ந்தார் மிதியார்கண் மிதிக்கி லவரும் வீழ்ந்தழிவ
ரதிபா தகரா மழற்குழியி னென்றே யறிந்திவ் வருவரையை
மிதியேலென் றுதடுத்திடுகவொ றுக்கமிதித்தார்தமைவேந்தன்.

சித்தர் முனிவர் தேவர்களுந் திகழுங் கயிலை மலைநீங்கிப்
பத்தி யுடனே வந்திந்தப் பரம னருண கிரியடைந்து
சித்த மொருக்கிச் சிவனடியைத் தெரிசித் துள்ளுமவனருளாற்
றத்த மிட்ட பலம்பெறுவ ரிம்மை தனினுந் தவறறவே. (௮௰)

வேறு.

வந்தமரர் மற்றையரும் வடகயிலை மலைநீங்கி
யிந்தவரைத் தாழ்வினிருந் திட்டவர மெய்துவரேற்
சந்திரசே கரனங்குத் தனித்துறைவ னேனென்றே
யந்தமுனி வினவவயன் விளங்கவிடை யருள்புரிவான். (௮௧)

பெற்றமரர் சித்தியினுட் பிராகாமி யந்தனையு
மற்றையரு மங்குமுள ரிங்குமுளர் மலவயிரி
பற்றறுக்க வுயிர்க்கிரங்கி யிலங்கியிடும் பதிவிதத்து
முற்றுறைந்[illegible] பணிவார்க ளொருபொழுது மொருவாதே. ()

வேறு.

ஆதலான் முனிவ நீயு மாதர வுடனே சென்று
பூதலந் தன்னிற் புக்குப் புகழ்பெறு மருணை வெற்பைக்
காதலாற் கண்டு கண்ணுற் கருத்தினு ளிருத்தி யங்கே
மாதவம் புரிக புத்தி முத்தியு நினக்கும் வாய்க்கும். (அரு)

நறைமலர்க் குழலி நாவார் புகழுமை நங்கை தானுங்
கறைகெழு கண்டன் வைகுங் கயிலையி னீங்கிப் போந்தே
மறைமுறை விதியா லிந்த வரையினு மருச்சித் தன்பாற்
பிறையணி சடையான் றன்னைப் பிரிவிலா வரமும் பெற்றாள்.

வேறு.

என்றிசைத்தா னெழிற்கமலத் தவிசினிலங் கயன்சனக
முனிக்கின் பெய்த
வென்றருளாற் சூதமுனி யிருக்குமறை முனிவருளத்
தெண்ண மொன்ற
வன்றருளிச் செய்தவழி யாராய்ந்திம் மண்டலத்து
ளாரு மெண்ண
வி[illegible]றிசைத்தேன் றிருத்திலங்கு மருணகிரி தன்னையெண
தெணத்துள் வைத்தே. (அடு)

வேறு.

துங்க மான கயிலை மலையனே
துலங்கு செஞ்சடைச் சூடு மலையனே
மங்கை யாளுமை யாண்மண வாளனே
மால யன்சிரங் கொய்யந்த வாளனே
வெங்கை யானை யுரித்த விடலையே
விரும்பி னார்தண்டு யாண்டு விடலையே
யெங்கள் பாச மறக்கர மாலையே
யீட ழித்துரித் தாய்க்கர மாலையே. (அசு)

மெய்யில் வெண்பொடி பூசும் விரதனே
விண்ணு ளார்மயத் தான விரதனே
கையி லம்பென வாய்த்தவன் கண்ணனே
கசியு மன்பட ரகமலர்க் கண்ணனே
பைதல் வெண்பிறை பாம்பணி வேணியே
பத்தர் மேற்படர் தற்குள வேணியே
மைய லென்றனை மாற்றிய வாக்கியே
மலின மண்ணினை ரேத்துரு வாக்கியே. (அஎ)

வேறு.

படியிற் றிவியிற் பயிலேனே பரமற் றவரைப் பரவேனே
நடலைக் கடலிற் படியேனே நமனைக் குறுகித் தடியேனே
யுடலைச் சிறையிற்புரியாதா ருணர்விற்புரிவுற் றொளிர்வோனே
யடிவைத் தெனதுச் சியினுளா யருணச் சயிலத் தமர்வானே.

இயலிற் பொருளொத் துயிர்வாழ்வா யெணமற் றிருளிற் றுயில்வேனு, னயர்வற் றறிவுற் றிடவேயுன் னடிவைத் தெனதுச் சியினுளாய், கயிலைச் சயிலத் தமர்வானே கனகக் கிரியிற் பயில்வானே, யயனைச் சுதனுக் கருள்வானே யருணச் சயிலத் தமர்வானே. (அகூ)

அருணசலோதயச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - உ0கூ.

---

# அருந்தவச்சருக்கம்.

உடலுறு முயிரொத் துயிர்தொறு நிறைவுற் றுறைசிவ னரு ள்பெற் றொளிர்வோனைத், திடமுடை யடியர்க் கிடர்கெட வுதயத் தினகர னெனமுற் றிகழ்வோனைத், தடவரை தனி லற் புதமுனி மொழியைச் சடுதியி லெழுதித் தருவோனைக், கடகரி முகனைப் பணிகுவ மவலக் கடலற வமலக் கரை சேர்வான். (க)

வே று.

ஒருவனிரு வுருமிகல நடுவே யுணர்வரிய வனலுருவி னொ ளிர்வோன், வெருவிய்வர் தொழலுமருள் புரிவோன் மிடலு டைய விகலவரை விடவே, திருணமதி சடைமுடியி னணி வோன் சகலரையு மகலரையு மகலா, னருணகிரி யமலனவ னடியா மறிவினுற நினைவமிரு ளறவே. (உ)

தினகரனு மதிதவள மதியுந் திருநயன மெனவனலு முடை யோன், கனகமன சடைமுடியி லணிவோன் கமழிதழி மதி யினொடு நதிநீர், மனநினைய நிலவருண மலையான் மலைவயிரி தனதடியை மறவா, ரனகனிரு மலனவனொடகலா தமருமு னை யடிமுடியி னணிவாம். (௩)

வே று.

தேர்ந்துரைத்தாந் திகழருண கிரியுதய மினியாந்
திசைமுகனைப் பதம்பணிந்து சனகமுனி செனக
சார்ந்தருண கிரித்தலத்தைத் தவம்புரிந்தே யுமையாள்
சங்கரனைத் தணவாத வரம்பெற்றா ளென்று
யார்ந்தமல னமர்கின்ற கயிலைமலை யொருவி
யருணகிரி யடைதற்கென் னேதுவரு ளெனலுங்
கூர்ந்தவரு ளயனவனுக் குரைத்தமுறை சூதன்
குறித்துமுனி வருக்குணர்த்துந் திறத்தையுங்கூ றுவமே.

வேறு.

மண்டலத்தி னடுநிலவு மாமேரு வதன்வடபாற்
றண்டிகழுங் கிரிமூன்று திகழுந்தென் றிசையினுமூன்
றுண்டுகுட திசைதனிலொன் றுளதுகுண திசையினுமொன்
றெண்டிகழிவ் வெட்டினுட்டெற் கிறுதிவரை யிமகிரியே.()

இந்தவிம கிரிக்குணபா கத்தின்வடக் கெழிற்கயிலை
யந்தவரை வெள்ளிமய மதன்வளமார் சொல்லவல்லார்
முந்தியநல் வினையாலே முதல்வனருள் பெற்றடைந்தே
சிந்தைதிகழ் வுறக்கண்ணுற் றெரிசித்துத் திளைப்பதலால். (௬)

ஐந்துருவு மதனினுள வாறுப்ரு வத்தலருஞ்
சந்ததமு முளவந்தச் சயிலத்திற் றபோதனரு
மந்தரத்தி லியங்கியிடுஞ் சித்தருமா தரவுறவுட்
சிந்தனைசெய் திருப்பார்கள் சிவனமலன் றிருவடியே. (௭)

பரிதியினைப் போலுமது படரொளியின் பாங்காலே
குருமதியந் தனைமானுங் குளிர்ந்திலங்குங் கோலத்தா
லெரியினுக்கு மீணையாகு மிருண்டவினை யெரித்திடலாற்
பொருவரிய சிவனெனலாங் களங்கமிலாப் புனிதத்தால்.(௮)

வேறு.

வணமார்தரு படிகோபல மெனவேவடி வுடையா
ரெணமார்மன முடையார்சடை யிடையேபிறை யுடையார்
திணமார்கதை மழுவோதிரி சிகையுங்கர முடையார்
கணநாதர்கள் பிரியாவெலை கயிலாயநன் மலையே. (௯)

வரியார்புலி வயிரம்மற மருவும்முழை யுழையே
வெருவாகளை யரவம்மது நிலைத்தொடு விரவு
மொருவாதுட னுறையும்பகை யறமற்றைய வுயிருங்
கரிபோயரி யருகேபயில் கயிலாயநன் மலையே. (௧0)

தீனுரமிர் தனத்தேன்புனற் சுனேயின்னலர்த் தேனே
யாறுதன பருகிக்களி யுறவேயணி பெறவே
நாறுவித விசைபாடிட நடமாடிடு மயில்கள்
கானுர்பொழி னிழலின்னெழிற் கயிலாயநன் மலேயே. (கக)

வேறு.

நாளமலர் மேலயனு நாரணனு நண்ணரிய நம்ப னமலன், வாளெயிறு திர்த்திரவி யைத்திகழெ ரிக்கொருகை மாற்றி மகவான், றேளிணே துணித்தறிவி றக்கனக னத்தலேது ணித்த ருள்செய்தோன், காளவிட முணடமணி கண்டனமர் கோயில் கயி லாய மலேயே. (கஉ)

ஆரணமு மாகமமு மங்கமுமு ரைத்தறிவு யிர்க்க ருளுவோன் பூரணன னந்தனும நாதியுமெ னும்பெயர்பு ரிந்த பொதுவாந் தாரணிமு ளுதமுடி வாகியுறு தத்துவமு திக்க நிலவுங் காரணனி ராமயன காரணன தெல்லேகயி லாய மலேயே. ()

துண்டமதி சூடிசுடு காடுநட மாடிதுணே யென்று துணிவா, விண்டைமலர் கொண்டுவழி பாடுபுரி மாணியுயி ரீர்வ லென வே, மண்டிவரு காலனுயிர் மாளவுதை செய்துமற வாத மன மார்க், கண்டயனே யாண்டருள்பு ரிந்தவன தெல்லேகயி லாய மலே யே. (கச)

.வேறு.

எண்ணரிய கொடுமுடியுண் டிதற்கிதனுச் சியின்முடியின்
வண்ணமணித் தூண்சதபத் தூறுங்கனக மண்டபத்தி
னெண்மணிக ளொளிர்ரியா தனத்தின்மிசை யுலகுய்ய
வெண்மதியம் புனேசடையா னுமையுடனே வீற்றிருந்தான்.()

நன்றுநகு நாண்மலர்மா லேகமேங்க நாற்றிசையுந்
தென்றிசையிற் குமரியெனுந் தேசமெலாந் தேசுறவே

பெண்ணொன்றிகழுஞ் சடைமுடியான் பூங்கமலச் சேவடியா
னென்றுமிணை யிலிபொதிய மலைநோக்கி யிருந்தனனே. ()

கங்கையமு னையுமிரட்டைக் கவரியினைப் புடைநின்றே
யங்கைகுவித் தார்வமுற வகமகிழ வணிகிளரு
மங்கையுமை தோழியர்க ளாழைநின்று வாழ்த்திசைப்பச்
செங்கமல முகமலரக் கண்களிக்கத் தெரிசித்தே. (கஎ)

மலரயன்மால் வானவர்கோன் மாதவரு மற்றையரு
மலர்தூவிப் பணிந்தேத்த வருணந்தி முதற்கணமுந்
தலைசாய்த்துத் துதிசாற்றச் சாமமறை யின்கீத
நலமாருந் தும்புருவு நாரதருந் நவின்றிடவே. (கஅ)

நடம்புரிய வரமகளிர் நாலுவாத் தியமுழங்கத்
திடந்திகழுஞ் சிவகணங்கள் விகடநடஞ் செயச்சிறந்த
கடந்தமுனைக் கதைவிதமு மருள்செய்தே கருணேசன்
விடங்கனுரந் தவர்தமக்கு முறையுறவே விடைகொடுத்தான்.

தணந்திருந்த மண்டபத்தைத் தண்மலர்ப்பூங் காவனத்தை
யணைந்தனனே யுமையுடனே யதனிடையி னலர்த்தவிசி
னெணந்தமக்கு மெணவரியா னெழுந்தருளி யிருத்தலுமே
மணங்கமழுங் குழலுமையாண் மலவயிரி வயின்வந்தே. (உ0)

மலர்க்கரத்தால் விளையாடி மகிழ்ந்தவன்கண் புதைத்தலுமே
யலக்கணுற வாருயிர்க ளிருண்மூடிற் றனைத்துலகு
நிலத்தவரு மருந்தவரு நீள்விசும்பிற் றேவர்களு
மிலக்கமற விருள்விளைந்த தென்னேவென் றிடருறலும்.(உக)

தேர்ந்துளத்தப் பொழுதுசில சித்தருமை விளையாட்டாற்
கூர்ந்தவிருண் மூடுதலாற் குறிப்பரிதாய்க் காலவித
மார்ந்தவிதி விளைவிட்டா ரனைவருமென் றறிந்திதனை
வார்ந்தசடை மதிவைத்தான் முன்னுரைப்பா மெனமதித்தே.

அடைந்தமலன் றிருமுன்னே பணிந்தெழுந்தா ருயிர்த்துணை
விடந்திகழு மிடற்றினனே சயபோற்றி வித்தகனே [யே
நடம்புரிவாய் சயபோற்றி நாநாயோ கங்களொயு
மடங்கிடச்செய் வாயாக்கி யமலசய சயபோற்றி. (உரு)

சத்திசிவ மெனவிரண்டு விதமான தற்பரனே
வித்தகனே நழுதுதிரு விளையாட்டால் விண்ணவருங்
கொத்துயராய்க் காலங்கள் குறியாதே குழைந்துளத்தி
னித்தியமை மித்திகழும் புரிந்திலர்கா ணிருமலனே. (உச)

ஒருகணத்திற் பாதியுமக் கொருகோடி வருடமெமக்
கிருண்மூடி யிடுங்கால மிந்தவிரு ளினைமாற்றாய்
பொருவிலியே போதகனே யெனலுமிரங் கிப்புனித
னெரிவிழியைநெற்றிதனிற்படைத்தொடுகெகியிருளெல்லாம்.()

அம்பகத்தைப் புதைத்தகரம் விடுகவுமை யென்றருள
நம்பனிணைக் கண்புதைத்த கரம்பிரித்தா ளுயகிதா
னும்பருமற் றையர்தாமு முரியவினை யினையொழிந்து
வெம்பியிட வியனிருளை விளையாடி விளைத்தனையே. (உசு)

உலகினுக்குத் தாயாகி யிருக்குமுனக் கிதுதகுமோ
வுலகனைத்து மொடுக்கிடுவோ மொடுங்கிடுங்கா லந்தனிலு
முலகினுக்கும் பாதமுறு லுதித்ததுநன் றேயெனலு [தான்.
மூலவுமுறை யுரைத்தருளிவ் வினையெனக்கென் றுரைத்துமை

அஞ்சியடி பணிந்திடலு முயிர்களக மலத்துவினை
நஞ்சழியப் பரிகார முண்டுலக நாயகியே
விஞ்சைமய நீகினக்கு வினையில்லை யாயினுங்கேள்
பஞ்சமுகத் தெமையிலிங்கந் தனிலருச்சி யிப்பழிபோம்(உஅ)

என்றுதிரு வுளஞ்செய்ய வெணங்குளிர்ந்தே யேந்திழையு
நன்றருளிச் செய்தவழி நறும்மலரி னுல்விதியா

லுன்றனையா னருச்சிக்கு மெல்லையினை யுணர்த்தெனலு
மன்றினடம் புரிவானு மகிழ்ந்தெதை சொல் வாமென்றான். ()

கருநெறிசேர் பரதகண்ட முரித்ததனுட் காஞ்சியெனும்
புரிசிறந்த ததனிற்செய் புண்ணியமொன் றுங்கோடி
யருமுனிவ ரண்டர்களுஞ் சித்தர்களு மப்புரியிற்
பரிவொடுசேர்ந் திருந்துதவம் பணிப்பெறுவ ரிட்டபலம்.(கூ0)

கம்பநதி யெனவொன்றுண் டாங்கதனிற் கலந்தாடிற்
கம்பிக்குங் கரிசனைத்தும் யாவர்க்கு மாதலினாற்
கம்பநதி யெனும்பெயரை யதுதனக்குக் கட்டுரைப்ப
ரும்பருமின் புறவொருமா நிலவுமதற் குத்தரத்தின். (கூக)

அத்தருநீ ழலிற்புரியு மருச்சனையா குதியாதி
யித்தனையென் றளவிடுதற் கரியபலத் தினையியுஞ்
சித்தமகிழ் வுறவங்கே சேர்ந்துசெய்தாச் சிரமத்தைப்
பத்தியினு லெமையருச்சி தவம்பணிப்பாங் கியருடனும்.(கூஉ)

வந்தகள மயமாகி யாமங்கே வார்குழலாய்
நந்தமைநீ யருச்சிக்கு முறைகண்டு நயந்தனது
சிந்தைமகிழ் வுறவிரும்புஞ் செயலளிப்பா மென்றிரங்கிச்
சந்திரசே கரனுமைக்குத் தண்ணளியாற் சாற்றினன்பின். ()

கணங்களெண்யோ கினியுமிடா கினியினொடு கமலையெனு
மணங்கினொடு நாமகளு மட்டவயி ரவர்சூழ
வணங்குயுமை யமலனடிமனத்திருத்தி வடகயிலை
தணந்துகணத் தொடுங்காஞ்சி வளநாடு தனைச்சார்ந்தாள். ()

வேறு.

மலைமகண் மலரடி வைக்க வுய்த்துறுந்
தலைமையை யுடையது தரும நூனெறி
நிலையினர் வளத்தொடு நிலவி வாழ்வது
தொலைதனக் கரியது தொண்டை மண்டலம். (கூரு)

விழுமிய பலத்தினை விரும்பி வேதனுஞ்
செழுமலர்க் கண்ணனும் பூமி தேவியு
முழுதுணர் முனிவரு முன்னி முத்தனைத்
தொழுதருள் பெறுபதி தொண்டை மண்டலம்.. (௩௬)

அல்லியந் தாமரைப் போதி ருவலர்
வல்லியாற் சண்பக முதல்வ னத்திறற்
பல்லுயிர் களுமுனு பாலி நீரினன்
மல்லலை யுடையது தொண்டை மண்டலம். (௩௭)

செல்வினை வயலினு னீண்ட தாழையால்
வல்லியின் னடைகமு கணிநல் வாழையால்
வில்லிவில் வருக்கைதே மாவும் வீஙகலான்
மல்லலை யுடையது தொண்டை மண்டலம். (௩௮)

வேறு.

வாமுள விந்தத் தொண்டை மண்டலம் பூமி தேவி
திருநுத லிதற்கு வாய்த்த திலதமே யாகுங் காஞ்சி
கருணையால் விரவு மிந்தக் காஞ்சிமா நகருக் கொத்த
புரமிலை புவியின் மேலைச் சிவபுர மிதனைப் போலும். (௩௯)

மண்ணுல கத்துண் மேரு மலையலை யாத வண்ணந்
திண்ணிய கமட மாகித் தாங்கிய செங்கண் மாலே
யண்ணலை யமலன் றன்னை யருச்சனை செயலு மந்தக்
கணணனுக் கமல னல்குங் கச்சபா லயமுங் காஞ்சி. (௪0)

புல்லிய நெறியிற் செல்லும் புத்தரு ளொருவன் பாச
மில்லவன் சிவனென் றெண்ணி யிகழ்ந்திடா தேமுற் கோலந்
தொல்லைய சயம்பு லிங்கத் தலரெனத் துணிந்து தாஞேர்
கல்லினை யெறிய நல்குங் கடவுளாலயம்வண் காஞ்சி. (௪௧)

கந்தையி னழுக்கை நீக்கிக் கடிதுதா வின்றென் றுார்தங்
கந்தையிற் கரிசு நீக்கா வணமனிழ பொழியக் கண்டே

சிந்திடச் சிலேயின் மேற்றன் சிரத்தினை யறைந்தான் முன்னே
வந்துநம் முடன்வா வென்ற வாக்கிதன் புரிவண் காஞ்சி. ()

வாய்ந்தமுற் றவத்தா லிந்த மண்டலந் தன்னிற் றேன்றித்
தோய்ந்துதண் புனலி னுளுஞ் சுத்தராய்ப் பத்தி யாலே
சாந்தமு மலருந் தாங்கித் தங்கையா லோணன் ருனுங்
காந்தனும் பணிய நல்குங் கடவுளா லயம்வண் காஞ்சி. (சங)

எண்ணரும் பத்த ரின்னு முளரவர் பணிந்தே யேத்தத்
தண்மலர் தூவிக் கையா லொப்பருந் தலேவா வென்றே
யுண்ணெகிழ்ந் துருகக் கண்டே யுகந்தவ ருள்ளந் தன்னிற்
கண்ணிய வரங்க ளல்குங் கடவுளா லயங்கள் காஞ்சி. (சச)

எண்ணுள முனிவ ரேத்தி யிறைவவித் தலத்தெல் லோரும்
பண்ணிடுந் தரும மொன்று கோடியாம் படிநல் கென்னப்
பண்ணிய கோடி யென்னும் பெயரினைப் பொருவி லாத
கணனுத லருளாற் பெற்ற கவினக ரதுவண் காஞ்சி. (சரு)

வேறு.

இனையவள முளகாஞ்சிப் புரிதன்னைச் சேர்ந்திமைய கிரி யின் மங்கை, மனமகிழப் பாங்கியரும் புடையடைய மற்றை யரும் வரநீர்க் கம்பை, யெனுநதியைக் கண்டுவிழி யினைகு ளிர வுதன்வடதீ ரத்தி னேய்ந்த,வனலனைய தளிர்ச்சினையோ டணிபெறுமே காம்பரத்தை யணுகிக் கண்டாள். (சசு)

தக்ககனி காயலருந் தண்டளிருஞ் சந்ததமுந் தழைத்தே யோங்குங், கொக்கிதன்மேற் குயில்கூவுங் குழையுமன மீண் டெமக்குக் குழகன் றன்னை, முக்கணனைப் பிரிதலினுன் முய ன்றிடுவாந் தவமெங்ஙன் மொழியாய் நீதான், விக்கினந்தீர் வ ழியென்றே விசயையெனுந் தோழியொடு விளம்பும் போதில்.

பொன்னனைய சடையானைப் புரவயிரி தனைகினேயப் பொ ருவில் வானைச், சின்மயனை நின்மலனைச் சிவனையுயிர்க் குயிர்

தன்னைத் தெரிசித் துள்ளு, மன்னியமற் றிங்கிட்டை புரிதலு மே யரியதவ மெளிதின் முற்று, மென்னுமவ டன்னையுகந் தக்கணத்திற் கணங்கடனை யேவி யேதான். (சஅ)

புரிவித்தாச் சிரமத்தைக் கம்பைநதித் தென்புடையிற் றிகழ யாரு, மிருளொத்த வளகத்தைச் சடையாக்கித் தோழியர்க ளேவல் செய்யத், துரிசெற்றுங் கம்பைநதி தோயத்தி னொடொ றுமுப் போதுந் தோய்ந்து, பரிசுத்த முறநீற்றை மெய்க்கணிந்து கண்டிவடம் பரித்துப் பாங்கால். (சகூ)

முற்றிமுறை யுறங்யதி முருகவிழு முளரிமல ராதி சொய்தே, சிற்றிடையார் செயவேவல் சிந்தையினுற் சிவலிங்கந் திகழச் செய்தே, தற்பரனை நிற்குணனைச் சதாசிவனை யந்தமயந் தன்னி லுன்னி, யர்க்கியமுங் கொடுத்தலரா லருச்சித்துக் குறைவறவா கமவாக் காலே.. (ரு௦)

கண்டகளங் கலையகளன் றனையிதய கமலத்திற் காதல் கூரத், திண்டிகழுஞ் சிலையென்னச் சித்திரரூ பமுமென்ன விருந்து சீரார், புண்டரிக வலர்முகத்திற் குவளைவிழி யாற்பூசை புறத்துங் கண்டே, யெண்டிகழு மெழுத்தாறு மியம்பியற மெண்ணான்கும் புரிவா ளென்றே. (ருக)

அருமறைக ளுன்கினையுந் தனித்தனியே பயில்விக்கு மந்தணர்க், குரிமையுறப் பயில்வார்க்கு முறையுளன பானுதியுதவ லொப்பில், பரமசிவ னாகமத்தைப் பயில்விக்கு மந்தணர்க்கும் பரிவு கூர, வுரிமையுறப் பயில்வார்க்கு முறையுளன பானமுத லுதவ லன்பால். (ருஉ)

வயிரவதந் திரர்வாம தந்திரர்கா ளுடர்பேய்கண் மாற்று நூலோர், மயிர்கடியு மாருகதர் பவுத்தரிவர்க் கன்னுதி யிடமு மீதல், செயிரரிக்கு மிருதியிதி காசஞ்சித் தாந்தந்தேர்ந் தோராய்

வார்க்கு, மூயிரினுக்குத் துணையான புராணஞ்சோ திடந்தர்க்க மோது வார்க்கும். (ருந)

காவியமா யுள்வேதங் காந்திருவஞ் சத்தவியல் கற்றாய் வார்க்கு, மாவியினுள் ளாணமல னருத்துவிப்பா னென்பார்க்கு மன்ன மீதல், கோவினுக்குப் புற்கொடுத்த னீரளித்தன் மருந்தளித்நல் கொடுநோ யாளர்க், கீவதுபா லும்மெணெயு மிளக்குழவிக் கெழுத்திணையார்க் கியற்று ●த்தல். (ருச)

இல்லம்விளக் கெண்ணெய்சுக்கு மீதனிறை கர்ப்பிணிக்கான் பாலென் றேதான், சொல்லியவெண் ணுன்கறமும் புரிவித்து நாடோறுந் துயர நீக்கிப், பல்லுயிர்க்கும் பரிந்துதனைப் பணிவார்க்குப் பசுபாச மென்னு மூல, வல்வினை யறமாற்றி மறவாதே யமலனடி மனத்துள் வைத்தே. (ருரு)

வே று.

வேனிற் காலந் தனிலைந்து வெய்ய தழலி னடுநின்று
மேனைக் காரின் மழைநின்று மிலங்கும் பனியி னீர்நின்றுங்
கானத் துறைபு மருந்தவரா காயப் புரியிற் கடவுளருந் [பாம்.
தானத்துளவிஞ்சையர்காஞ்சித் தலத்தினுமைசெய்தவம்பார்ப்

என்றுங் கடைந்தா ரவர்களாடே யின்ன லுளத்துற் றிரங்கியிடக், குன்று தியற்றித் தவந்தனைக் கோட்டுப் பூவுங் கொடிப்பூவு, நின்றாழ் புனலி னிவந்தலரும் பூவு நிலத்து நிகழ்பூவுஞ், சென்றே வனத்துங் கொய்துகொடு வந்தே தானுஞ் சேடியரும். (ருஎ)

கம்பை நதியின் மணலள்ளிக் கூப்பிக் கையால் வடகரையி, னம்பன் றன்னை யுனைத்துயிர்க்கு நாதன் றன்னை நவிற்றியவத், தம்பந் தன்னிற் கண்டுவிதி தன்ன லருச்சித் திடும்போதிற், கம்ப னென்னுங் கடவுளுமைக் கருள்வா னென்றே கருத்துதலும். (ருஅ)

மின்னிப் பொழிய மேகங்கள் விழுந்த வெள்ளம் வியன்க ம்பை, யென்னு நதியுட் புகுந்தலேத்தே யேல மிலவங் காதியி னே, மன்னுங் கரையோ ரிரண்டினையும் விழுங்கி வரவு மய ங்கிமன, மன்னே யன்னே யென்றுமையை யயலுற் றவர் பாங் கியரழைத்தே. (௫௯)

விரைய வெழுக பெருவெள்ளம் விழுங்கிக் கரைக ளிரண் டினையும், வருகின் றதுகண் டிலகொல்லோ வென்ற மாற்றந் தனைக்கேட்டு, வொருவா துமையாள் சிவலிங்கந் தன்னைக மையா லுறத்தழுவிப், பிரியா திருந்தாள் சிவன்செயலே யிது வென் றுள்ளம் பிறழாதே. (௬௦)

வரதன் சிவனின் னருளாலே தோன்றி வானந் தனில் வாணி, சுரிமென் குழலே பெருவெள்ளந் தொலைந்த தினிநீ துயரொழிந்து, விரைய விடுக சிவலிங்கந் தன்னைத் தழுவும் வியன்கரத்தைக், கரையா வுருவா மணலானீ சமைத்த விலி ஙகங கணங்குழையே. (௬௧)

இந்த விலிங்கந் தனிலிலங்கி யிருந்தே யாமேத் தினரெவ ர்க்கும், பந்த மறுப்பும் போகவிதந் தனையும் பாலித் திடு வோமு, மெந்தம் பதிகள் புவிதலத்தி லெண்ணற் கரிய வுள வவற்றுள், முந்திக் கனிக்கும் பதிவிதங்க ளறுபத் தெட்டா முகிழ்முலையே. (௬௨)

அந்த வறுபத் தெட்டினுக்கு மதிக மருணு சலமுயிரின்
பந்த பாவத் தினுக்குரிய பெயரே ருணுமப் பாவந்தா ।
னிந்த வரையைத் தெரிசித்தார்க் கில்லை யிதனு லிதனும
முந்தியருணுசலமெனவேமொழியப்படுஞ்சொன்முறையாலே

செய்ய தழலின் மயமாகித் திகழு மிதுதா னிதனுலே, வை யத் தவர்கண் டருணகிரி யென்றே வணங்கு வார்மனத்தின்,

மைய லரிக்கு நினைவாருக் கிதனுன் மலைமேன் மருந்தென்றே, மெய்யன் புடையார் விள்ம்புவர்க ளெமக்கு நாமம் விளங்கி னவால். (கூச)

இனைய கிரியை யீயடைந்தாங் கிறைஞ்சி யேத்தி யெணத் திருத்தி, முனிவர்க் கதிபன் கவுதமனு முயன்று தவமாங் குறைகின்ருர், னென்தி யானென் செருக்கில்லா னெமக்கு மெய்யன் புடையனவன், றனதாச் சிரமஞ் சார்ந்துணர்ந்தச் சயில விசிட்டந் தனையவனுல். (கூரு)

இயலின் விதியா லெமையருச்சித் தந்தத் தூல விலிங்கத்தும்
பயிலுங் கணங்க ளாலந்தப் பதியிற் பணுவித் தாச்சிரம
முயல்க வரிய தவகினது முன்னுந் தோன்றி முன்வினைதா
னயலாயறவெம்மொடும்பிரியாவரமுமளிப்பாமுனக்கணங்கே

என்றே மொழிய வெணியுமையு மெழுந்த மொழியின் பொருளெல்லா,நன்றே யென்றே யனுமதித்து நயந்தாங் கிருந்த முனிவர்க்கு, மொன்ற வுணர்த்திப் பரமசிவ னுரைத்த மாற்றத் தினையினிநீர், குன்ருப் பேரன் பொடுமமலன் குழகன் பரம வருள்குறித்தே. (கூஎ)

எனது கொங்கைக் குறியிலங்கு மிந்த விலிங்கந் தனில்வி தியாற், றினமும் புரிந்தே யருச்சனையைச் சிவனே பவனே சகநாதா, வனகா வசலா வகளங்கா வென்று துதித்தே யார் வத்தான், மனமு மவன தாலயமே யாக விருமின் மகிழ்ந் திங்கே. (கூஅ)

அகள மயமா யான்ருனு ஙார்வத் தொடுமிங் கொருகலையாற்
சகள மான சிவலிங்க மீதற்குப் பூசை தனைப்புரிவே
னிகள மறக்கு மித்தமய கிரந்து பணிய நிலத்தெவர்க்குந் [தே.
தவளக்கயிலைதனிற்போகம்கொடுத்தேயதின்மீதினுஞ்சமைத்

வேறு.

காமித்த பலந்தன்னைக் கண்டளிப்பாம் பத்தர்க்குக் கருணை யாலே, யாமித்தா ரணிதன்னி லிதனாலே காமாட்சி யென்றே கூறு, நாமத்தை நயந்தேமிந் நாமநவின் றெமையுனுவார் பாவ நாசர், சேமத்தைப் பெறுவாரே யோமமெனும் புரத்திருந்து செகந்தே யுங்கால். (எ0)

என்றியம்பி யிறையமல ளியம்பியவா சகப்படியே யருணை வெற்பைச், சென்றடைவே னினியென்று திருவுள்ளஞ் செயவெவருந் திகைத்துத் தாழ்ந்து, நின்றனர்க ளப்புரியை நீங்கியும்ம நிரந்தகணம் பரந்து செல்லத், தன்றுணையாந் தோழியர்கள் புடையடைய வருணகிரித் தலத்தைச் சார்ந்தே. ()

வேறு.

ஆதர வுடனே சேர்ந்துகண்டெழி லருண வெற்பைப்
போதினைத் தூவி யன்பாற் பணிந்துமுன் புரிந்து நின்றே
வேதக போற்றி யெல்லாம் விமலனே போற்றி போற்றி
சேதக போற்றி யன்பர் திமிரமுந் திருநோக் காலே. (எஉ)

அனைவருங் கண்டே யுய்ய வருணவெற் பானாய் போற்றி
மனநினை வினுக்கு மெட்டா மலரடி யானே போற்றி
யெனதுயா னென்னு முள்ளத் திழுக்கிலார்க்கெல்லாமுள்ளுந்
தினகரன் போலவென்றுந் திகழ்ந்தருள் செய்வாய் போற்றி.

ஆதிக ளந்தமில்லா வமலனே போற்றி யெனறே
யோதியே துதிகள் பின்னும் பணிந்தெழுந்துகந்து மீண்டே
மாதவ ரங்கே தங்கும் வனத்திலுஞ் சிரமஞ் சேரப்
பாதபங் கயத்திற் சூட்டி யலரிணைப் பணிந்து பாங்கால். (எச)

தங்குக விங்கே யென்றே யவரவர் சாற்றுங் காலைச்
சங்கர னேவ லாலே கவுதம முனிதன் சாலை
தங்குத லேசால் பென்று சாற்றியே கவுத மன்றன்
மங்கல வாச்சி ராமஞ் சேர்தலு மகிழ்ந்து வந்தே. (எரு)

பணிந்தனன் பத்த ரோடு மம்முனி துதிகள் பண்ணி
யணிந்தகா ரணமு மிங்கே யருங்கயி லாயந் தன்னைத்
தணந்தகா ரணமுங் காஞ்சித் தலமடைந் தமலன் பாத
மணந்திகழ் மலரா லர்ச்சித் தவனுரை மதித்த வாறும். (௪௬)

அறிந்தன னுமைதன் பாலென் ருதனைத் திருந்தி யார்வஞ்
சிறந்துற விதியி னாலே பூசனை செய்தா னப்போ
தறம்பொரு ளின்பம் வீடு மறிந்தமா தவனை நோக்கி
யுறைந்தருந் தவத்தை யிங்கே புரிந்திட வுன்னி னேனென். ()

பன்னுக பரம மான விப்பருப் பதத்தின் மேன்மை
யென்னவே யுமையா ளந்த‧முனிசிவ னிணைத்தா ளெண்ணி
யன்னைதன் னேவ றன்னை மறுத்திட வஞ்சி யங்கே
தன்னது குறிப்புத் தன்னை வணங்கியே சாற்ற லுற்றான். ()

அடக்கிவே தாதி நூலி னறம்பொரு ளின்பம் வீடும்
படித்துணர்ந் துய்ய யாரும் பாங்கினுற் பகர்ந்தீர் நீரே
முடிக்குரித் தான மன்னர் மொழிவழி யனுகர் பண்ட [ருன்.
மெடுத்தெதிர் கொடுத்தல் போல யானுமக் கிசைப்பே னென்

வேறு.

அருண கிரியி னுதயமுத லறைவ லயன்கற் பாந்தத்தி [ற்
லொருவ னமலனுள்ளவனுலகம்புடைப்போமென்றுளத்தி
ெறருளுந் தன்னை யிலனுகிச் செகத்துக் கதிபன் யானென லு
மருளு மனத்தாற் செகநாதன் யானே யென்றே மாயவனும்.

அன்றிப் பொரலு மயனுடனே யமல னவர்போ ரறவழலா
யொன்றி யோங்க வதனுதி யந்த முணரா தவரோடுங்கி
நின்று துதிக்கவவர்க்கருளிநீண்டநெருப்பைப்பொருப்பாக்கா
யென்றே யவர்க ளிரந்திடலு மருண கிரியாக் கினனிறைவன்.

இந்த வயன்மா லிருநான்கு திசையார் மலரா னேனையருங்
கந்த மலரா லருச்சித்துக் கருதும் பலன்கள் கைக்கொண்டார்

பந்த மான பாவமறும் பார்த்தார்க் கிந்தப் பருப்பதத்தைச்
சிந்தித் தவர்கண் டிங்குறைந்தே முத்த ராவர் செகமுடிவில்.()

கமலா லயத்திற் பிறந்தாருங் காசித் தலத்தி லிறந்தாரு
மமல னடங்கண் டவர்தாமு மணியார் தில்லை மணிமன்றி
னிமல னருணை கிரிகண்டு நினைந்தா ரெவரு முத்தரெனும்
விமல னுலகத் துயிருய்ய விரித்தே யுரைத்த வேதமுமே. ()

இந்தக் கிரிப்பூ ருவதிசையி னிடையிட் டரோ சனைக்கப்பால்
வந்தித் திரவி வசித்திடுமில் வாறே வீர பத்திரனும் [திடுவன்
வந்தித் துறைவன் றென்றிசையின் வருணன் குடபால் வசித்
சிந்தை திகழத் திரிசூலம் வடபா லிலவிச் சிறந்துறுமே.(அச)

வேறு

எண்டிசை யுள்ளார் கண்டே யிறைஞ்சிட முக்கோ ணத்தா
யெண்டிசை முகமா யென்று மிலங்கிடு மிந்த வெற்புத்
தெண்டிரைச் சோணை நிந்தத் திருமலைத் தென்பாற் செல்லு
மண்டியே குணபா லோடுந் திருநதி மகிழ மண்ணோர்.' அரு)

ஒருவட மோங்கு மிந்தக் கிரியினுத் தரபா கத்தி
னொருவரு முணரா ரந்த வடத்தறு முரமார் மூலம்
பிரிவறு நிழலோ டிற்றுப் பேணிய பலங்க ளீயு
மருமலர் வருளந் தானென் றூதன்புடை மன்னி நிற்கும். ()

செய்தொரு தீர்த்தந் தன்னைச் சிவனது திருமுன் மாயன்
மையலாற் பிருகு பாரி தனைமுனாள் வதைத்து வந்த
வெய்யதீ வினையை விட்டான் விதியினா லதனின் மூழ்கிப்
பையரா வரையி லார்த்த பரனையர்ச் சித்துப் பாங்கால் (அஎ)

அத்தடத் தொருகோ கன்னத் தளவுபூ தானஞ் செய்தான்
வித்தக வேத மோதும் விப்பிரர்க் கீர்வந் தாலே
துய்த்துமேற் போகந்தன்னைத் துகளினைத்தொலைத்தந்தத்தின்
முத்தனே யாவன் மண்ணின் விண்ணினு முனையாவென்றும்.

அதுதனக் கங்கி திக்கி னயமொரு தீர்த்த மாக்கி
மதனனுக் கிளைத்துப் பெற்ற திலோத்தமை தனைவாஞ் சித்தே
யுதயமா கியவூ னத்தை யொழித்தன னதனின் மூழ்கி
விதிவழி விமலன் பாதத் தருச்சனை விழைந்து செய்தே. (௮௯)

கொடுத்தவ ரிதன்கூ லத்திற் கோவினை யந்த ணாளர்க்
கடுத்தநீ வினையைப் போக்கி யவனியிற் போகந் துய்த்து
விடுத்துவிண் மேலே சென்று வியன்சிவ புரத்தின் மேவி
முடிக்குநா ளுலகந் தன்னை முத்தராய் முளையா ரென்றும். ()

செய்தொரு நதியைச் செய்யாள் சிறந்தவிப் புரியின் கீழ்பாற்
றுய்யவந் நீரிற் றோய்ந்து சுருதியின் வழியந் நீரை
மெய்யனை யருண வெற்பின் விமலனை யாட்டிச் சூட்டி
யையமுந் திரிவு மின்றி யாருயிர்ச் சங்க ளாய்ந்தாள். (௯௧)

அயிந்திர மென்னுந் தீர்த்தங் குணதிசை யாக்கி மூழ்கி
வயந்திகழ் மகவான் மாய்த்தான் முனமறை வாக்கி னோனைக்
கயந்துகொன் றதனு லான கரிசினை யகல வங்க
ணயந்தருச் சனையைச் செய்தே நான்மறை விதியி னாலே. ()

வன்னிதன் றீர்த்த மல்கும் வன்னிதன் றிசையின் வாஞ்சித்
தன்னியன் மனையா டோளை யணைந்தவ னதனின் மூழ்கில்
வன்னியிற் றிர[illegible] மென்ன மாய்ந்திடு மந்த மாசு
சென்னியிற் பிறையுஞ் சூடுஞ் சிவனடி சிந்தை செய்தே. ()

தென்றிசை தன்னிற் றீர்த்தஞ் செய்தது தன்னின் மூழ்கிக்
கொன்றுயிர் கொள்ளவல்ல குறிப்பினைத் தருமன் கொண்டான்
வென்றிவெள் விடையி னானை விமலனை விதுலன் றன்னை
யென்றுமெவ் வுயிரு நீங்கா விறைவனை யெணத்துள் வைத்தே.

நிருதிதன் றிசையி னீடு நிருதியாற் சமைத்த தீர்த்த
மொருமைய வுணர்வி னாலே யுளத்துணி யமல னென்றுன்

முருகலர் மல்கு மந்தப் பொய்கையின் மூழ்கி னொருக்
கொருவும்வே தாள பூத மற்றைய வூன மெல்லாம். (௬௫)

குடதிசை வருணன் செய்த குளந்தனின் மூழ்கி னோர்க்குத்
திடமுறு பாவந் தீருஞ் சிவனடி சிந்தை செய்தே
கடனுடன் மூழ்கி யங்கே கரிசினை யறுக்கீ நிற்பர்
விடையினை யூரும் வேத வேதக னருளி னாலே. (௬௬)

வடகுட திசையின் வாயு வாய்க்கவே தீர்த்தஞ் செய்து
கடனுட னதனின் மூழ்கிக் கழித்தன னவலக் கந்தந்
தொடலினு லான தோட மற்றைய துரிசுந் தீரும்
படியுநாக் ககத்தி லுன்னிப் பசுபதி பதும பாதம். (௬௭)

ஆக்கியுத் தரத்திற் பொய்கை யளகையா திபன்கண் ணாலே
நோக்கியே கவுரி தன்னை வணங்கிடா னூனத் தாலே
வீக்கிய வினையை விட்டான் விதியினு லதனின் மூழ்கி
நாக்குற நவின்று நம்பு னுமமா யிரமு நண்பால். (௬௮)

திசையிலீ சானந் தன்னிற் செய்தொரு தீர்த்தம் யானு
மிசையிய லென்ன வெண்ணற் கருமுயிர் தோறு மெங்கு
மசைவற நிற்கு மீச னணிமுடிக் கதனீ ராட்டிப்
பசையுறும் விதியாற் பூசை பண்ணியே பாங்கி னாலே. (௬௯)

பண்ணியே துதிக டன்னைப் பன்முறை பரமனேயென் கண்ணுறத் தோன்றி யாட்கொண் டருளெனக் கசியுங் காலத், தெண்ணுதற் கரியா னென்முன் னிலங்கினன் பணிந் தேன் யானு, மண்ணிதின் வருக வென்றே யருளலு மனுகி நின்றேன். (௭௦)

உன்றனை யுகந்தோ முன்றன் பத்தியு முணர்ந்திப் போது
மென்றருள் புரிந்தே யிந்த வெல்லையி லிருந்து நீதா
னென்றுமர்ச் சனைசெய் யெம்மை யென்றருள் புரிய யானு
நன்றருள் புரிந்த வாறென் றோதியே துதிக னுவால். (௭௧)

மண்ணுல கத்தி லுள்ள மலர்முத லுபயோ கத்தா
லண்ணியந் தணரிவ் வெற்பை யருச்சனை செயவல் லாரோ
நண்ணிய விலிங்க மாக வுதித்திடி னுவந்து நோக்கிப்
பண்ணுவர் பரிந்து பூசை பனுவலின் விதியைப் பார்த்தே. ()

என்றியா னிரந்து கூற விரங்கியெவ் வுயிர்க்கு மீசன்
பொன்றிகழ் சடையான் வன்னிப் பொருப்படி வாரப் பூர்வத்
தோன்றியுற் பவித்தான் றானே யொளிர்சிவ லிங்க மாகி
யென்றனக் கினியான் றன்னைப் பணிந்தெழுந் தேத்தியானும்.

ஆகம விதியி னாலே யருச்சனை புரிந்தே னன்பா
லேகனை யநாதி முத்தன் றனையிணை யில்லா தானை [லா
மோகமு முளத்தென் பெற்றேன் முதல்வனை யுயிர்தட் கெல்
மாகமு மதியே னாகி மலரடி நிழல்வாஞ் சித்தே. (௧௦௪)

விதியினா னீரு மந்த விமலலிங் கத்து மர்ச்சித்
ததிபதி யானார்க் கெல்லா மதிபதி யானான் றன்னைச்
சதிவழி நடம தாடுந் தற்பரன் றனைச்சந் தத்தா
விதமுற வேத்தி யிட்ட வரத்தினைப் பெறுவீ ரென்றே. (௧௦௫)

அருந்தவ னுரைத்த மாற்ற மனைத்துநன் றென்றே யன்னை
புரிந்தருந் தவஞ்செய் தற்கப் புரியினீ சான திக்கிற்
றிருந்துமாச் சிரமந் தன்னைக் கணங்களாற் செய்வித் தங்கே
வரந்திகழ் காவ லாக வயிரவர் தம்மை வைத்தே. (௧௦௬)

உரமுள துர்க்கை தன்னை யுட்டுவா ரத்தின் வைத்துள்
ளுருகிடக் கண்ட யாரு மொள்ளழ னடுவி னுற்றே
யரியன தவஞ்செய் தன்பா லாகம விதியி னாலே
பரமமா லிலிங்கந் தன்னிற் பண்ணியர்ச் சனைநா டோறும். ()

மற்றைய சிவலிங் கத்தும் வாரியான் மலரி னானு
முற்றியே பூசை தன்னை முறையுறக் குறைத வேற்ற

மற்றிட வநாதி முத்த னடியிணை யகத்துங் கண்டு
சிற்றுயிர்க் கிரங்கி யெண்ணூன் கறங்களுஞ் செய்யு நாளில்.()

வேறு.

இந்திரனு மிமையவரு மேனையரு மருணகிரி யெல்லை தன்னின், வந்துமையாண் மலரடிமுன் வணங்குதலு மமையுமவர் வாட்டங் கண்டே, யெந்துமது குறையறைமி னென்றிரங்கி யருளுதலு மிரக்க மில்லான், மந்தகனஞ் சனகிரியின் வாழசுரன் மகிடனெதிர் வருவா ரில்லான். (௧௦௯)

அயனளித்த பெருவரத்தா லாடவரா லழியாதா னசுரர்க் கெல்லா, நயமளித்து மற்றையரை நலிந்திடுவான் வெடித்த மொழி நவிலு நாவான், பயமிகுத்துப் பணிந்துபணி யாங்கள் செய வீற்றிருப்பான் பரம னென்னு, மயமிகுத்த வரமுடையான் வலியுடையா னெமையென்றும் வருத்த லாலே. (௧௧௦)

வலியற்றோ முடலத்தின் மானமுமற் றோமணத்தின் வானநாட்டி, னிலையற்றோ நீணிலத்தார் நீடியபா தாளத்து நிலவுவாரு. மலனுற்றே யவனாலே யவனேவல் செய்தொழுகி யழுங்குகின்றோ, நிலைமற்றோர் பற்றுமெமக் குமதுசர ணிலையல்லா லென்ற போதில். (௧௧௧)

அஞ்சேலஞ் சேலவனை யழிவிப்பா மழிவிலதோர் கன்னி தன்னாற், றஞ்சானைச் சுராராலுந் தோலானை யாவர்க்குந் துரிசன் றன்னை, மஞ்சாரும் வரையனைய வடிவினனை மகிடனெனு மசுரன் றன்னை, நஞ்சான மொழிநவில்வான் றனையவனூற் சிலர்வுருந்தல் கண்டந் நாளில். (௧௧௨)

என்றிரங்கி யருள்செய்யு மிமையமயி லிணையடியை யிறைஞ்சி யேத்திச், சென்றனரிந் திரன்றேவர் திருமுனிவர் மற்றையருந் தந்தந் தேச, மன்றிநகை யடர்ப்பானு மழிவனினி யென்றுளத்தி லச்ச மற்றே, யொன்றுமிரு வினைப்பலத்தை யுயிர்க்குதவு முமைசரண முளத்துள் வைத்தே. (௧௧௩)

வேறு.

துரிசனெனு மசிடனுக்குத் தொலைதலும்பக் குலவினைகள்
வரியகரு மான்மரையும் வதைத்தருந்த மதித்தவன்றன்
பரிசனங்க ளருணகிரி வனந்தன்னிற் படர்தலுமே
வெருவியடைந் தனவுமையாச் சிரமத்தை மிருகமெல்லாம்.()

கண்டவற்றுட் கலுழ்ச்சியினைக் காவலுறும் வயிரவர்கள்
மண்டியவர்க் கெதிர்சென்று பொருதவரை வலிதொலைத்தார்
விண்டவர்கள் விரைந்தோடித் தமதிறைவன் வீற்றிருக்கு
மண்டபத்தைச் சேர்ந்தவனைப்பதம்பணிந்துவாழ்த்திசைத்தே.

எண்டிசைக்கு ளெமக்கெதிர்நின் றெமைப்பொருதா ரிலரி
ன்று, மண்டியெதிர் வந்தெமுனம் வயிரவரெம் வலிதொலை
த்தா, ரண்டமுற வோங்குமரு ணாசலத்தி னருவனத்தோ,
ரொண்டொடியாச் சிரமத்தைக் காத்திடுவா ருமையுடையார்.()

என்றியம்பக் கேட்டவனு மெரியுமிழு விணைவிழியி
னன்றெனவே நகைத்தவரை நலித்தழிக்க வல்லவர்க
ளின்றெவரென் றவன்வினவ விக்கணமே யவர்தம்மை
வென்றிடுவா மென்றுசில வீரர்விரைந் தெழுந்தனரே.(௧௧௭)

அவர்தம்மு ணிரும்பூனெனும் பெயருடைய வடலசுர
னவகண்டந் தனிலெனக்கா ரெதிர்நிற்பா ரெனநவின்று
தவவனங்காத் திடும்வடுகர் தலைதறிப்பே னெனச்சாற்றிக்
கவசமுட லினுக்கணிந்து காவலனார் கழல்பணிந்தான்.(௧௧௮)

வெல்லவரை யென்றவனும் விடைகொடுப்பவிரைந்தெழுந்து
மல்கமுழ வாதியொலி மதகரிபாய் பரிதானை
யெல்லையிறேர் புடையடையு யானையினை யூர்ந்தடைந்தா
னெல்லைவயி ரவர்நின்ற செருக்களத்தப் பொழுதருத்தே. ()

வந்தசுரர் வடுகரொடு பொருகின்றா ரென்றுமன
நொந்துமுனி வர்கள்பணிந்து நுவலவுமை முன்னுமைய

மந்தவசு ரரையழிப்பாள் கொற்றவையென் றழைத்தவளைச்
சிந்திடுக மகிடனது சிரந்தனைநீ செருக்களத்தில். (கஉ0)

என்றுதிரு வுளஞ்செய்ய வெழுதரிய விளங்கொடியு
நன்றெனவே நவின்றுனதின் னருளாலே நாயகியே
சென்றுசெருக் களத்திலவன் சிரந்துணிப்பேன் றிவிமகிழ
வென்றனளக் கணத்துமையின் னருளுணர்த்தவெணித்தாமே.

எண்டிசையுங் கீழ்மேலென் றிருதிசையுங் காப்பாரு
மண்டிவரு மசுரரொடு வயிரவர்கள் பொரும்போரைக்
கண்டிடுவா மகிடனொடு கன்னிபொரும் போருமென
மண்டலத்தி னருணகிரி யடைந்துமைதாள் வணங்கினரே. ()

அமர்க்கஞ்சாக் கொற்றவையை யயன்முதலோர்கண்டுவந்
தமக்குரிய படைகொடுத்தார் வாங்கியவ ளவைதரித்தா
ளெமக்கெல்லா மென்றுமருந் துணைநீயே யெமக்கிரங்கிச்
சமர்க்களத்தின் மகிடனைக்கொன்றழியெனவுஞ்சம்மதித்தாள்.

ஆர்ந்துபணிந் துமையடியை நினைந்தமல னடியிணையுங்
கூர்ந்தவரு ளாலிமவான் கொடுத்தவிறன் மடங்கலினை
யூர்ந்துபுகழ்ந் திடப்புடையே யும்பருமிம் பருமுகந்து
சேர்ந்தனள்கொற்றவையசுரர்செருக்கியுறுஞ்செருக்களத்தை.

நோக்கியெதி ருறநின்ற நோலாரும் படைவியந்தே
யாக்கினளப் போதுதன தடிதனில்வே தாளகணம்
போர்க்களத்துக் கார்வமுறும் பூதகணம் புரவிகரி
தாக்கமருக் கஞ்சாத வரக்கரையுஞ் சமைத்தனளே. (கஉ௫)

வேறு.

கண்டவன்க ளித்துநின்ற கன்றுசேனை யைக்கதங்
கொண்டவாளெ டுத்தனன்கொ தித்துமற்றை வீரரு
மண்டிவா ளெடுத்தெதிர்ந்து வந்தசேனை மாய்த்தனர்
துண்டமாய்வி ழப்பதஞ்சி ரந்துணிந்து தோளுமே. (கஉசு)

செருக்கியேகி கும்பனோடு வந்தெதிர்ந்த சேனையை
முருக்கினா ரக்கருமு றிந்துதோன்ம றிந்திடத்
தருக்கியேகி கும்பனுந்த றித்தெதிர்ந்து வாளினா
லரக்கரைத்தொ லைத்துமற்றை யாரையும டர்த்தனன். ௧௨௭)

அணங்குகண்ட வன்படைச்செ ருக்குமந்த வேலையிற்
பிணங்களாக வந்தசேனை பேரினானி கும்பனுந்
துணிந்திரண்டு துண்டமாக வாளினாற்று ணித்தன
னிணங்கசைக்க ணந்தனைப்ப ருந்தருந்தி நீடவே. (௧௨௮)

வேறு.

தப்பினர் சிலர்சர மெனவிரை வொடுதப னமுமுறநுண்
மைப்பெரு வரைதனி னிலவிய மகிடன தடிபணியா
வொப்பரி யவளுடன்மிடலினு மொருவனிறைகையொளிவா
ளிப்பொழு தெறிதலு மெம்படை யிறைவனு நிலையிலனே. ()

என்றலு மிணைவிழி யினிலெரி வெரிபுகை யும்மெழவே
நன்றென நகைபுரி தலுமுழை நணிநில வினர்பலருஞ்
சென்றவள் வலிசித றுவமென லுவருரை யதுதெளியா
நின்றவ ருயிர்பரு குவனென வவனுள மதிலெணியே.(௧௩0)

வேறு.

எண்ணரிய தேரிவுளி யிபமென்ற விவைமிடையத்
திண்ணியதோ ளசுரர்களுஞ் செறிந்துவரத் திசைநான்கும்
பண்முழவ முதலளவில் பறையறையப் பலர்பரவ
வண்ணமணித் தேரூர்ந்து வந்தனன்போர்க் களமகிடன். ()

பார்த்தணங்கின் படைதன்னைப் பதைக்கவுட லம்பகழி
கோத்துறுகிக் கொடுமரத்தி னெய்துபெருங் குருதிநதி
நீர்த்தரங்க மெனவொழுக நேரிழைசே னையைத்துணித்தான்
கூர்த்தபசி கெடப்பருந்தின் குழுக்களிக் குழுவினுக்கு. ()

வேறு

விட்டன ரிவர்களு மசுரர்மெய் விடமன சரம்விடலும்
பிட்டட லிருபிள வெனவிழ வுதிரமு நனிபெருகப்
பட்டன ரிடர்பல ரியமன புரிவிரை வொடுபடர்வார்
கிட்டர ரெமதெதிர் பொருமிவ ரெனவசு ரர்கணினைவார். ()

உண்டிதி ரமுநிண மொடுதசை யுடல்விடு தலுமசுரர்
குண்டுக ளுளகூ ளிகளொடு பூதமு நனிகுழுமிப்
பண்டிகழ் தருபா டலினொடு நாடக முறைபயிலுங்
கண்டிமை யவர்கண மகிழ்வுற வருமுனி வர்கள்கணமும். ()

மிடலுறு தன்படை யுடைதலும் விறலுறு கனிபடைமுன்
றிடமுடை யுடன்மகி டனுமிரு சினமுற வலியுறுதேர்
கடவின னடுபடை யொடுமெதிர் வருகனி கன்படைமுன்
விடமன சரமவ னவருட லொடுபட நனிவிடலும். (கஙரு)

விட்டொரு கணையினை யவனெதிர் விடுகணை யொடிபடவே
கட்டுரு வினள்கடு வனபல கணையவ னுடல்விடலும்
பட்டவ னுடலினை யுருவின பலகணை களுமவலத்
துட்டக னிதுய ருறவலி தொலைதலு முடலிடையே.(கஙசு)

பொங்கின னெதிர்பொறி யரவென வருள்சிலை மழைபொழி
தங்கியு மெனவச னியுமென வதிர்குர லொடுநிலவத் [வித்
திங்களை நிகர்முக முடையவள் சிலையுறு மழைபொழிவித்
தெங்கணு மவனிட ருறவெதிர் சிலைபொடி படவெணலும்.*()

வேறு

முணங்கினைச்ச மர்க்களத்த ழிக்கைவீர மன்றெனு
மெணந்தனைத்த டுத்திறுப்ப லிக்கணைத்தி லென்றவன்
றணிந்துவிட்ட வம்பினைச்ச னிக்குகண்டு தானெனைத்
திணிந்தநேமி வாளியொன்றை விட்டரிந்த தேறலும். (கஙஅ)

தோலெடுத்து வாளெடுத்து டற்றுளக்கி யுக்கிரக்
காலனுக்கு மொப்பெனக்க ரித்தெதிர்த்த திர்த்தனன்
வேலெடுத்து வாளெடுத்து வீரிகுத்தி யீரவே
யோலெடுத்தி லைத்தொலைச்செ ருக்களத்தொ ளித்தனன். ()

அருக்கனொப்பெ னப்பினைச்செ ருக்களத்து தித்தனன்
சிரத்தினைக்க திர்த்தசக்க ளத்தினிற்சி தைத்தனள்
சுரர்க்குமொப்பெ னத்துளித்தெ திர்த்திடத்து ணித்தனள்
கருத்துருத்து விஞ்சையந்த வஞ்சகன்க ழுத்தையே. (கச0)

சரபமென்ன வந்துநின்ற வன்றனைத்த றித்தனள்
பிரமனென்ன வந்துநின்ற வுன்றனைப்பி ளந்தனன்
முரனைவென்ற மாயனென்ன வந்துமூண்டு மண்டின
னுரமுமுள்ள காளிபோலு தித்ததிர்த்தொ ளித்தனன். (கசக)

வன்னியென்ன வந்தெதிர்த்து தித்தொடுங்கி மாய்வனுங்
கன்னியென்ன வந்தெதிர்த்து நின்றொலைக் கரப்பனு
மின்னுமென்ன வந்தெதிர்த்தொ டுங்கிவீழ்ந்து வீவனு
மன்னமென்ன வந்தெதிர்த்தெ யக்குலைந்த ழிந்திடும். (கசஉ)

ஏனமென்ன வந்தெதிர்த்தெ யத்தளர்ந்தி றந்திடு
மானுமென்ன வந்தெதிர்த்த நின்றிளைத்து மாய்ந்திடுங்
கானவல்லி யம்மெனக்க லித்தொலைக்க ரந்திடுஞ்
சேனமென்ன வந்தெதிர்த்து நின்றுளைந்து தேய்ந்திடும். ()

வேறு.

கரிபோல் வரலுங் கதிர்வா ளதனு
லரிவா ளதனைச் சிரமங் கொருகோ
ளரிபோல் வரலும் மிதனைச் சிரமும்
மரிவாள் பரிபோல் வரலும் மரிவாள். (கசச)

அரவம் மெனவே வரலும் மதனைச்
சிரமும் மரிவாள் சினமுற் றெவரும்

வெருவும படிவே றுருவம் பலவாய்
வரலும் மரிவா ளுலவா வலியாள். (கசரு)

வே று.

வஞ்ச கன்வடி வம்பல கொள்ளுவன்
றுஞ்சி டான்றுணித் தாலு மினியிவன்
றஞ்சு மாறுமை யாள்சொலு மென்றுதன்
னெஞ்சுள் விந்தை யுமையை நினைதலும். (கசசு)

மதிக்க யாரு மகிட னெனவரு
மெதிர்த்த போதவ னைச்சிர மீர்ந்தது
மிதித்து நின்றிடின் வேற்றுரு வங்கொளா
னிதத்தை யெய்த வுலகியற் றிவ்வணம். (கசஎ)

என்னும் வாக்கெழ வானத் தெணியவை
யன்ன வன்மகி டாசுர ளுய்வரல்
கன்னி கண்டு கனைந்தவன் றன்சிரந்
தன்ன தாளின் மிதித்தன ளத்தலை. (கசஅ)

வே று.

வானோர் பொழிந்து பூமாரி வாழ்த்தி னார்கண் மண்ணவரு, மேனோ ரெவருந் துதியம்பி யெமக்குத் துணைநீ யெனவி சைத்து, நானா வுலக முயமகிடன் றன்னை வதைத்தா யென நவில, யானோ வதைக்க வல்லேனோ வுமையா ளியம்பா விடி லென்றாள். (கசகூ)

மேதித் தலைமே லிருபதமும் விளங்கி யோங்க வெங்கரமுஞ்
சோதிக் கரத்திற் சக்கரஞ்சங் கிலங்கத் தனுவுஞ் சுடர்ச்சரமும்
வாதித் திடுவாள் கேடகமும் வரத மபய மெனும்வடிவும்
போதத்தெவருந்தியானிக்கப்புரிந்துவிளங்குய்ந்திட்டப்புவியும்.

பரிவுள் ளுறவக் கோலத்தைப் பாங்காற் பூசை பணுவித்தே
புரிமை யுறவே சிந்திப்பார்க் குதவி விசயந் தனையுளத்திற்

கருதும் பலங்க ளனைத்தினையுங் கருணை தன்னா லளித்தாளென்
றுரைசெய் திடவும் பருக்கதிப னேனுமென் றுளாய்ந் திடவுலகம்.

அவரா தரித்த வடிவுடனே யணுகிப் பணிந்தா ளன்னைபத,
மெவருந் துதித்தா ரவ்வணங்கை யிமய மயிலும் வாழ்த்திசை
த்துத், திவியும் புவியு ணடுங்கியிடச் செற்ற கொடியோன்
சிரந்தன்னைக், குவிமென் முலைக்கொற் றவைபதத்தின் கீழே
கண்டாள் கொடியிடையாள். (௧௫௨)

கரிசார் கொடிய வவ்வசுரன் களத்திற் கண்டே சிவலி
ங்க, மருளா ருமையா ளதுதனைத்தன் கரத்தாற் பறித்தா ளது.
கரத்தி, லொருவா துறையக் கவுதமன்ற னுழைச்சென் றிந்தச்
சிவலிங்கம், வருமா றென்கொ லவ்வசுரன் களத்தி லெனமா
தவனுரைப்பான். (௧௫௩)

சித்தந் திகழு மொருசித்தன் வரனே யவன்பே ரவன்றனை
தாள், வைத்தே யருணா சலந்தன்னை மறவான் மண்ணின் வள
த்தினையுங், கைத்தா னவன்றன் கருத்துகந்து காண்டற் கவ
னைச் சிலமுனிவர், முத்திக் குரியவ ரித்தலத்தில் வந்தா ரவன்
முன் முகமலர்ந்தே. (௧௫௪)

மதித்துத் தன்னைந் தனைக்காண வாஞ்சை யுடன்வந் தார
வரைத், துதித்தே யெதிர்கொண் டின்சொலினைச் சொல்லா
திருந்தா னவன்றன்னைக், கொதித்து முனிவர் குணதுட்ட
னிவனென் றுளத்திற் குறித்தியலின், விதித்த விதிக ளறியா
னை நோக்கி விரைந்து விளம்பினோர். (௧௫௫)

மகிழ்ந்து காணத் தனைத்தன்பால் வந்தார் தம்மை யெதி
ர்கொண்டு, திகழ்ந்து சிறந்த வாதனத்தி லிருத்தித் தெளித்
தர்க் கியசலமும், புகழ்ந்து பூசை புரிதலினி திவைநீ புரிந்தா
யிலையிதனா, லிகழ்ந்த மகிடா சுரனை வென்றார் மதியா திருந்
தானை. (௧௫௬)

அந்தக் கணமே யவன்மகிட னுறு னவர்வாய்ச் சாபத்தாற், சிந்தை தளர்ந்தே சித்தனவன் றிரு மிந்த வுடலென்றே,வந்து நம்மை யென்பாலே வணங்கா வழுவெவ் வழிமாறு, மிந்த விரண்டு மின்னருளான் மொழிமி னென்றே யிறைஞ்சுதலும்.

வேறு.

கொற்றவை தன்கை வாளாற் குறைப்பளுன் சிரத்தை யந்தப் பொற்றொடி மிதிப்ப ளுன்றன் புன்றலை யினையப் போதிற் குற்றமு மற்று முன்னைக் காயமுங் கூடு மென்றே நற்றவர் நடந்தார் தந்த மாச்சிர மத்தை நாடி. (கரு அ)

பண்ணினன் றவங்க ளந்தப் பாதக னயனை நோக்கி நண்ணிமுன் னயனும் வேண்டும் வரத்தினை நவில்வா யென்ன விண்ணினிற் றேவ ராலு மெண்டிசை வேந்த ராலு மண்ணினுள் ளார்க ளாலும் வதைத்திடா வரநல் கென்றான்

ஆகநீ குறித்த வாறென் றயன்வர மளித்தே யேக மாகவெண் டிசையு மற்றை யுலகமு மண்டிச் சென்று மோகனும் வல்ல னுகி முனிந்தெதிர்ந் தாரை யெல்லா மேகநா யகனுய்ச் சேனை யொடும்விரைந் தியங்கு நாளில். ()

வேறு.

தரித்தே களத்திற் சிவலிங்கந் தனையர்ச் சிக்குந் தவனையவன், பரித்தே கரத்தாற் பசிதணிய விழுங்கி னனப் பொழுதவன்றான், றரித்த விலிங்க மிவன்களத்திற் றங்கிற் றிவன்று னுரிமையுட, னருச்சித் தவனே சிவலிங்க மலனே யென்று னருந்தவனே. (கக்க)

அங்கை தன்னி னெருவாதே யுமருமிந்தச் சிவலிங்க, மிங்கு நீங்கும் வகையாதோ வென்றே யுமையா ளெண்ணுதலு, மங்குல் வாணி யுதித்திமய மயிலே வருத்தந் தணிமனத்திற், கங்கை முதலா நவதீர்த்தத் தாடி னதுநின் கரத்தொருவும். ()

கங்கை யமுனை சரசுவதி கமழ்கோ தாவிரிகாவேரி
நங்கை சிந்து நன்மதைசீ தேவி சோண நதியெனவே
யிங்கே யெனுமொழுன் புகுநதியு மிந்தத் தலத்தி னினிதுதிக்கு
முங்கை விந்தை கைவாளால் வெட்ட வாய்க்குஞ் சிலைமுடுவில.

வே று.

ஐப்பசி மாதந் தன்னிற் கேட்டையி னதனின் மூழ்கு
முப்பது நாள்கண் முற்றின் மோசன மாமி லிங்க
மப்பெரும் பொய்கைக் கூலத் தர்ச்சனை யதனுக் காக்கித்
தப்பற வங்கே மற்ரு ரிலிங்கமு மர்ச்சிப் பாயே. (கசு௪)

கார்த்திகை மாதத் துள்ளே கலந்தவுத் திராஅ டத்தில்
வாய்த்தநூல் விதியா லெம்மை வரையடி வார லிங்கத்
தேத்திநல் விழாவுஞ் செய்வி யிலக்குக தீப மெங்குங்
கார்த்திகை யோடு திஙகள் கலந்துறுங் காலந் தன்னில். ()

விளங்கிகின் முன்னே யாமுன் விருப்பமுந் தருவ முன்னைக்
களஙகமு நீங்கு மென்னக் கடவுளி னருளி னலே [ட்டே
யுளங்குளிர்ந் திலங்கத் தோன்று மோசையை யுமையாள் கே
யளந்ததன் பொருள்க ளெல்லா மனுமதி செய்தன் பாலே. ()

கொற்றவை வருக வென்று கூறியிச் சிலையி னின்கை
வெற்றிவா ளால்வெட் டென்று வுமைசொல வவளும்வாளா
லற்றிடச் சிலையை வெட்டி ளுள்கய மாக வங்கே
யுற்பவித் தனர்கங் காதி யொன்பது கன்னி மாரும். (கசு௭)

அருளிய காலந் தன்னிற் சிவமுனி யனும தத்தாற்
பொருவிலாக் கங்கை மூழ்கிப் போக்கின ளொருபா வத்தைப்
பிரிவுபெற் றிலங்க மற்றை யதனையும் பெருநீர்ப் பொய்கைக்
கரையிலர்ச் சனையைச் செய்து கட்டுரை விதியி னலே. ()

மற்றொரு சிவலிங் கத்தை மாமறை விதியி னலே
கற்றனி லுதித்த வந்தக் கட்கதீர்த் தத்தின் மேல்பா

லர்ச்சனை புரிந்தாள் பாவந் தீர்த்தரு ளமலன் றன்னைக்
கொற்றவை தன்னைத் தங்கென் றேவினள் வடகூ லத்தின்.()

கார்த்திகை மாதந் தன்னிற் கடவுள்கற் பித்த நாளிற்
சீர்த்திகழ் விதியி னாலே திருவிழாத் தனைச்செய் வித்தே
கார்த்திகைக் கார்த்தி கைக்கண் கனலழ லினையுஞ் சாத்தித்
தீர்த்தமு மாட்டி யர்ச்சித் தனள்சிவன் முறையிற் றேவி. ()

முறையுற விதியிற் பூசை முடித்துநின் மலன்முன் னின்றே
பிறையணி சடையாய் போற்றி பேரரு ளாளா போற்றி
கறைகெழு கண்டா போற்றி கயிலைநன் மலையாய் போற்றி
நறைமலர்க் கொன்றை சூடி நம்பனே போற்றி போற்றி. ()

ஏகனு மானாய் போற்றி யிருவருக் கரியாய் போற்றி
யோகரு முய்ய மூன்று விதமுற வுறைவாய் போற்றி
போகரு முய்ய நான்கு மறையினைப் புகன்றாய் போற்றி
யாகமந் தன்னை யைந்து முகத்தினா லளித்தாய் போற்றி. ()

எட்டுரு வாகி யேழி னிசையுமாய்ச் சமய மாறாய்த்
தொட்டவைந் தொழிலாய் நான்கு தோற்ற[illegible]ாய்க் காலமூன்றா
யிட்டமாம் பலமி ரண்டா யேகனு மானாய் போற்றி
கட்டிலா வுயிரின் கட்டைக் களைந்தருள் கடவுள் போற்றி. ()

உலகொரு மூன்று மாகி யுணருயிர் மூன்று மாகி
மலமொரு மூன்று மாகி மற்றவத் தையுமூன் றாகிப்
பலமொரு மூன்று மாகிப் பகர்ந்தவிவ் விதங்க ளெல்லா
மலனுமாய் நின்றாய் போற்றி யநாதியே யமல போற்றி. ()

எண்ணரு முயிரை யீன்றே யவற்றிலங் இடுவாய் போற்றி
யெண்ணரு மண்ட பேத மியற்றிவி வித்தாய் போற்றி
யெண்ணரும் வினையு மெண்ணிப் பலமுறை யீவாய் போற்றி
யெண்ணிரு மூன்றி னொடு மெய்யவொனா விறைவா போற்றி.()

வேறு.

என்றுதுதி செய்யவுமை யீசனுமு கந்தே
நின்றனன கத்தொடுபு றத்தினுநி றைந்தே
மன்றினட மாடிபிறி வுற்றமய முள்ளே
யொன்றுசிவ ஞானவிழி யாலுறவு ணர்ந்தாள். (கநசு)

ஞானவிழி யாலமல மேனியினை நாடிக்
கானினட மாடியிரு கண்மலர்பு தைத்தா
ளேனவினை தன்னையுமொ ழித்தொளிர்தல் பெற்றாள்
வானவர்கள் பூமழைபொ ழிந்தனர்ம கிழ்ந்தே. (கஎஎ)

வேறு.

புரிந்தாய் பிழைமுன் கயிலையெனும் பொருப்பி னதனு லெமைநீதான், பிரிந்தா யவற்று லெமைஞான விழியாற் கணடப் பிழைபிரித்தாய், திரந்தே யெம்மை யினிநீங்கா துறைக வென்றே திருமலன்றான், பரிந்தே பகர்ந்து நிறைந்தெங்கும் நிற்கு நிலையும் பகர்ந்திடுவான். (கஎஅ)

மூல மெண்ணற் றுயிர்க்கு நீதான் மூளைத்த வுலகினுக்கு
மூல முனக்கு நாமன்னை நீரின் மயத்தின் முளைத்தெழுந்த
ஞால விறுதிக் குயிரினுக்கு நாமே தந்தை யெனநவின்று
காலங் கடந்த கடவுளனக் கிட்ட வரங்கள் கழறெனலும். ()

வேறு.

வான நாடரு மண்டலத் தார்களு
மேனை நாடரும் வந்துன் னிணையடி
மான நூல்விதி யின்வழி பட்டிட
ஞான மேனிய நல்கரு ளென்றனள். (க௲௦)

முழவ மாதிவி தங்கண்மு ழங்கவே
விழவு நாடொறு மல்க வீதிவழி

புழுகு சந்தகி லாதியும் போதுடன்
செழுமை யோடெறத் திங்கள் விழவுமே. (௧அக)

மாத பூசையு மற்றுள பூசையு
மோது நூல்வழி யின்னுற வோதியே
வேத மாதி விதியுணர்ந் துன்மலர்ப்
பாத பூசனை பண்ணும் பனவரும்.

மற்று முள்ள வினையிய லின்வழி
முற்று வாருந் தழைந்துற மூலனே
சிற்று யிர்க்கிரக் கத்தருள் செய்யெனப்
பற்றி லானு மனுமதி பண்ணினன் (௧அங)

பணிந்த வன்பதம் பின்னும் பணிமொழி
யணிந்து தன்சிரத் தார்வத்தி னுற்றன
தெணந்த னிற்பிரி யாமல்வைத் தேத்தினுள்
கணங்கள் கண்டு களித்திடக் கண்ணினால். (௧அச)

வேறு.

புடைநின்ற புரந்தரனைப் பார்த்தவன்பே ரழகருணைத்
தடவரையை வலஞ்செயலும் வலஞ்செய்தார் தம்பலமு
மடைவுபட வருள்செய்து முறையுறவே யனைவர்க்கும்
விடைகொடுத்தா லயத்தருந்தா முலையுடனே வீற்றிருந்தான்.

வேறு.

என்றிசைத்தா னெழிற்கமலத் தவிசினிலங் கயன்சனக மு
னிக்கின் பெய்த, வென்றருளாற் சூதமுனி யிருக்குமறை மு
னிவருளத் தெண்ண மொன்ற, வன்றருளிச் செய்தவழி யா
ராய்ந்திம் மண்டலத்துள் ளாரு மெண்ண, வின்றிசைத்தேன்
றெருத்திலங்குமருணகிரிதன்னையெனை தெணத்துள்வைத்தே.

வேறு.

வரமறை யோதிய வாயவனே வானில நீரல வாயவனே,
பிரமனை யாக்கிய பீடினனே பேரா ணட்டவம் பீடினனே,

யரவினை யிற்சொுறு மாட்டினனே யணங்குமை யாளுறு மா ட்டினனே, கருவினை காய்ந்திடுங் கண்ணினனே கருதடி யா ர்தமக் கண்ணினனே. (கஅஎ)

போதகத் தீருரி மூடினனே பொருவிழி யாளொடு மூடின னே, மாதவ ருக்கற மோதினனே வள்ளொளி பல்லற மோ தினனே, யாதியு மந்தமு மில்லவனே யடியர டைந்தம ரில் லவனே, பேத மவர்க்கிறப் பேணினனே பிறர றி யாவணப் பேணினனே (கஅஅ)

வேறு.

கருவைத் துரிசைக் களையாயெங் களைவைக் கருணைக் கட லானே, பரிவுற் றுனைக்கண் ணினைமூடிப் பழிபற் றியவம் பிகைபார்மே, லெரியுற் றறலுற் றெழிலாகத் திடரூற் றிட வொப் பரியாளென், றரிவைக் கதுலைக் கருள்வானே யரு ணச் சயிலத் தமர்வானே. (கஅகூ)

பகலற் றிரவற் றுன்பாதம் பரவப் பதம்வைத் தெனையா ளாய், சகலர்க் கவரொத் தவர்பாசந் தனையெட் டதனைத் தகைவானே, விகலர்க் கவருக் கழல்வானே விரையத் துக ளைத் தனியேதா, னகலர்க் கெதிருற் றருள்வானே யருணச் சயிலத் தமர்வானே. (ககூ0)

அருந்தவச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪00.

---

# வலம்புரி சருக்கம்.

உடலுறு முயிரொத் துயிர்தொறு மொளிர்வோ
னுமைதவ முயலப் பிரிவற வுறைவோன்
சடைமுடி தனிலப் பொடுசமி யணிவோன்
சகலரு முயவெட் டிருபது தருவோ
னடியிணை நிழல்புக் ககலற வுறைவரூ
னகவிரு ளொடுதத் துவவித மறவே
கடுவினை யொடுகட் டுருவமு மறவே
கடகரி முகவன் கழலிணை பணிவாம். (க)

வேறு.

கனக வெற்பினுங் கயிலை வெற்பினுங் கழுகு வெற்பினும் பிரியாதா, னனக னற்புத னருண வெற்பின னலரி னைத்த தன் னடிபாடு, மனித ருக்குமுண் மலம ரித்திலங் குணர்வி னுற்றெழும் பனுபூதி, தனைய ளிப்பவன் சகள நிட்களன் சர ண நித்தலும் பணிவாமே. (உ)

அருவ னிட்கள னமல னித்திய னசல னற்புத னுமை யாள்வான், கருவி னுட்படு மெமைய ளிப்பனு மெனம னத்தி னுங் கருதாதா, ரிருவ ருக்குமொள் ளெரியெ னத்திகழ்ந் திகலி ரித்தவர்க் கினியானு, மொருவ னைப்பில னவனி டத்துறு முமைம லர்ப்பத முனுவோமே. (ங)

வேறு.

பகர்ந்தனம்பார்ப் பதிபகவன் கண்புதைத்து வந்த
பழுதரித்துத் தவத்தமல னொடுபிரியாப் பாங்குந்
திகழ்ந்துறுமித் திருமலையை வலஞ்செயலும் பலமுஞ்
சிவனிசைத்தா னிந்திரனுக் கென்றருளிச் செய்தா
யுக[illegible]ணர்த்து விரித்தவையு மொன்றுபணிந் தயன்முன்
னுரைத்தலுமே சனகனய னுரைத்த[illegible]றை யினையோர்ந்
தகவுகுளிரச் சூதமுனி யருந்தவருக் குணர்த்து
மந்தநெறி தனையுமனை வருமுணர வறைவாம். (ச)

## வ ர கி ரி வ ல ம.

### வே று.

வானவர் தமக்கு முந்துஞ் சந்திமார் கழிமா தந்தா
னூனுடற் கரிசம் போக்கி னுளத்தினுந் துரிசு நீக்கு
மானுடர் புனலின் மூழ்கி வாய்க்கவே நியதி முற்றி
மோனிக ளாயிம் மாத முந்திய நியதி தன்னில் (எ)

வலம்புரிந் திடுக விந்த வரைசிவ னடியுள் வைத்து
நிலந்தனி லுயிர்நோ காதே நிறைந்தகர்ப் பிணிபோற் செல்க
நலந்தரு வெழுத்தோ ரைந்து நாவுற நவில்க தங்கைத்
தலங்குவித் துரம்வைத் தல்லாற் செபவடந் தரித்துத் தாமே.()

செப்புமிம் மாதந் தன்னி லொருவல மொருநாட் செய்தான்
றப்பற வருட மொன்று வலம்புரிந் தானை மானு
மிப்புவி தன்னி லிட்ட பலமுறு மிவன்மே லேறி
யொப்பருஞ் சிவலோ கத்தின் வளந்தினைத் துறைவன் மீளான்.

அடியொரு வைப்பி னுகு மாயிர மசுவ மேதம்
படிதனில் வாச பேய பலமொரு நூறும் பாங்காந்
தடையற முற்று மிந்தத் தடவரை வலஞ்செய் சான்றோர்
விடையுடைக் கொடியா னுளுஞ் சிவபுரம் புகுவர் மீளார்.(அ)

மொழிந்தவிம் முறைமை செய்க மதுரமுந் தியநாட் டன்னில்
விழைந்துவின் ணவரு மற்றை வேதக முனிவர் தாமுங்
குழைந்துளந் தன்னி லிந்தக் குலவரை குறித்துத் தம்பா
லழிந்திட வகிட்ட மிட்ட முறவலம் புரிவ ரன்பால். (கூ)

இந்தநன் னுளி லன்பா விதமுயிர்க் கிசைய வெண்ணி
யந்திவா னனைய மேனி யுமலனு மிழைதன் னேடு
முந்தியே யிந்த வெற்பை வலஞ்செயு முறையி னுலே
சிந்தையுந் திகழப் போற்றி செய்திடக் கணங்கள் சேர்ந்தே.

பண்டிதனாக மூர்க்கனாகபா தகனே யாக
வெண்டிகழ் குலத்தோனாக விவரலா வெவரு மாத
லண்டரும் பணியு மிந்த வருவரை வலஞ்செய் தாரேல்
விண்டிடு மனந்தங் கோடி மேனிவெவ் வினைக ளெல்லாம்.()

பாதுகை யோடு செல்லேல் பரிகரி யூர்ந்து செல்லேன்
மீதுறக் குடையுஞ் செல்லேல் வித்தக விமல னாதி
நாதனை யுன்னி யிந்த நகத்தினை வலஞ்செய் நல்லோர்
வேதக னருளி னாற்றம் விரும்பிய பலங்கொள் வாரே. (கஉ)

மருவலர் தம்மை வெல்வோன் மாகித னென்னு மன்னன்
பரியினை யூர்ந்தே யிந்தப் பருப்பதம் வலஞ்செய் தான்முன்
னரகினுள் வீழ்ந்தா னந்த நற்பரி சிவலோ கத்தை
விரவியே கணங்கட் கெல்லாம் வேந்தனாய் விளங்கிற்றன்றே.

ஆதலி னாலே யன்ப ரகத்துனி யமலன் பாதம்
பாதுகை யாதி விட்டுப் பதத்தினால் வலத்தைச் செய்க
வேதகன் விமல னென்றும் விளங்கிடு மிந்த வெற்பைப்
போதக னிவர்க்கு நல்கும் புத்தியு முத்தி தானும். (கச)

ஒருபத வைப்பி னாலே யுளத்தினும் பாவ மோடு
மிருபத வைப்பா லேகு முறையினா லிசைந்த பாவந்
திரிபத வைப்பாற் றீரு முடலினாற் செய்த தீமை
நரர்தமக் குயிரை யூரு நம்பனின் னருளி னாலே. (கரு)

காலையின் வலத்தைச் செய்யிற் கரிசுகள் கழியு முச்சி
வேலையி லிட்ட சித்தி விளையும்பின் வேலை தன்னிற
சாலவே தழைத்து நீடுந் தனத்தொடு தானி யாதி
ஞாலமுய்ந் திடவே வாய்த்த வருணவெற் பினையெந்நாளும்.

ஆதித்த வாரந் தன்னில் வலஞ்செய்தா ரநந்த மெய்ந்நோ
யாதித்த லோகஞ் சேர்ந்தின் னார்த்தரன் புரியுஞ் சேர்வர்

சோதிச்சந் திரனவா ரதநற சுழனறவா தாமு மவ்வா
றேதத்தை யில்லா மற்றை வாரத்தும் பலமிவ் வாறே. (கஎ)

ஆக்கையா லொருகா லிந்த வருவரை வலஞ்செய் தார்தம்
வாக்குற வெழுந்தோ ரைந்து மரனடி மனத்துள்.வைத்தே
போக்கிழுன் பொதியு மீசன் புரம்புகுந் திருப்பர் புன்மை
நீக்கிகின் மலன்ருள் சேர்வ ருலகெலா நீங்கு நாளில். (கஅ)

சித்திரை மாதந் தன்னிற் சிறந்துறு மபர பக்கத்
துத்தம மான வீரே ழாந்திதி யுறும்வா ரத்திற்
சுத்ததோ யத்திற் ரோய்ந்து துய்யவெண் ணீறு பூசி
வித்தக் விலிங்கந் தன்னைப் பணிந்தியல் விதியி னாலே. (க௯)

இம்மையிற் பலத்தை வேண்டா திமையவர் சுவர்க்க மாதி
யம்மையிற் பலத்தி னைசை யற்றுளத் தநாதி முத்தன்
மும்மல மோச கேச னுயிர்க்கவன் மூர்த்த மான
செம்மைய சிலம்பு தன்னை வலஞ்செயுந் தெள்ளி யோரே. ()

அசுத்ததத் துவத்துஞ் சுத்தா சுத்ததத் துவத்துந் தங்கார்
விசுத்ததத் துவத்திற் போகந் திளைப்பர்கள் விமல னேக்கா
ணசித்திட மூல நோயு நாதமு மொடுங்கு நாளில்
வசிப்பர்க ளநாதி முத்தன் மலரடி நீழல் வாழ்வின். (உக)

மூலமெவ் வுயிர்க்கு மூல மலத்தினு மநாதி முத்தன்
மாலய னூட நீர்க்க வளரொளி யாகி நின்ற [னே
தூலலிங் கத்தைத் தொண்டர் வலஞ்செயு முறைமை சொன்
மாலயத் திலிங்கத் தன்பர் வலஞ்செயு மடைவுஞ் சொல்வாம்.

ஆலயவலம்.

வேறு.

திகழும் பூர்வ திசைநோக்கி யமல னிலங்குஞ் சிவலிங்கந்,
திகழு மற்றைத் தென்றிசையை நோக்கிப் புவியிற் சிவலிங்

கர்,திகழு மருங்கிக் குடதிசையை நோக்கிச் சோம திசையினை யு,, நிகழு முகமைந் ததற்கதனைப் பூர்வ திசையி னிகழ்த்திடுவாம்.

இலங்கு மீச முகமுச்சி தன்னி லீசத் திசைநோக்கி,யிலங்கு மதன்கீழ்த் தற்புருடம் பூர்வத் தெழிலார், வலத்தோண்மே, லிலங்கு மகோரந் தென்னோக்கி யினியசாதஞ் சிறுபுறத்தி, னிலங்குங் குடதிக் கினைநோக்கி யிடந்தோள் வாமம் வடக் கிலங்கும். (உச)

வேறு.

தென்றிசை தன்னை நோக்கித் திகழ்ந்திடு னிலிங்க மங்கே
யொன்றிடும் புருட மீச முச்சியுற் றங்கி நேர்க்குந்
தென்றிசை யகோரம் பூர்வ திசைபுரு டத்தா னத்தி
னென்றுமிவ் வாறு மற்றை யுத்தர திக்கு மேற்கும். (உரு)

எத்திசை தன்னை நோக்கி யிலங்கிடுஞ் சிவலிங் கந்தா
னத்திசைத் துவார பால ரர்ச்சனை புரிக வன்பா
லத்திசை தன்னிற் பீட மிடபமு மெதிரே யாகுஞ்
சுத்தசை வாக மத்தின் விதிவழி தொகுத்துச் சொன்னோம். ()

கன்மசா தாக்கி யங்காண் கருதுதற் புருட மெங்கு
மன்னபா னுதி யந்த முகந்தனிற் கொடுக்க வன்பா
லுன்னிடு லகோரங் கர்த்தா மூர்த்தமே யுணரிற் சாத
மன்னிய வமூர்த்தம் வாம மதித்திடிற் சிவமீ சானம். (உஎ)

கன்மசா தாக்கி யத்திற் கலந்துறு மற்றை நான்கு
மன்னுமூன் றிரண்டு மொன்று மற்றைய முகங்க டம்மி
லுன்னியம் முறைமை தன்னை யோதன மாதி யெல்லாந்
தன்மசா தாக்கி யத்திற் றிசைதெர்றுங் கொடுக்க கற்றோர். ()

பூருவ திக்கு நோக்கும் புனிதன்மூன் வலப்பா னிற்க
வாருறத் தெற்கு நோக்கு மமலன்பின் னிற்க வவ்வா
றேருற மேற்கு நோக்கு மிறைவன்முன் னிடப்பா னிற்க
சீருறப் புரிவார் பூசை யிம்முறை சோம திக்கும். (உ[illegible])

மனிதர்தா பித்த லிங்க மாதவர் வானோர் மற்றைப்
புனிதராங் கணங்கள் பூசை புரிந்திடு மிலிங்க மென்றும்
பனுமிவை நான்குந் தானே படிதனி லுதித்த லிங்க
மெனுமித னோடு மைந்தும் பரார்த்தமென் றெணுகவென்றும்.

உரைத்தவிவ் வைந்துமொன்றுக்கொன்றினில்வரமாயோங்கு
வரத்தினை யளிக்கு மிந்த முறையினால் வலஞ்செய் வார்க்கு [ம்
மருச்சனை புரிக விந்த வைந்திலிங் கத்து மன்பாற்
றரித்தெழு நான்கு மீசன் முகத்தினுற் பவித்த சைவர். (௫௧)

வைதிகர் பெறினுஞ் சைவ தீக்கையை வாய்க்க வேதங்.
கையினாற் பரார்த்த லிங்கந் தீண்டுதல் கடனோ வன்று
வையகந் தனக்கு நாசம் வருமிவர் தீண்டிற் சுத்த
சைவராற் பரிகா ரத்தைப் புரிகநூல் சாற்று மாற்றால். (௫௨)

தரித்தபி டேக மந்தஞ் சுசியினாற் சுத்த சைவ
ரருச்சனை புரிக வொன்று மன்பினாற் பரார்த்த லிங்கந்
தரித்திடா னபிடே காந்தந் தாவர லிங்கந் தீண்டிற்
பரித்திடா வளத்தைப் பாரும் பார்த்திவர்க் காகும் பாவம். ()

ஆதலால் வேந்த னாய்ந் தடைவற வபிடே காந்த
மோதுநூன் முறையி னுள்ள வுத்தம னாலே யென்றும்
போதக புனிதன் றன்னைப் பூசனை புரிவித் தானே
லாதிதன் சிவலோ கத்தி னமர்வன்பூ சகனு மங்கே. (௫௪)

சந்திகண் மூன்றும் பூசை தவறறச் சமைத்துச் சைவ
னந்தநள் ளாதி யில்லா வமலனீ டிலிங்கந் தங்கு
முந்துமா வரணந் தன்னின் முறையுறு வலமுஞ் செய்து
வந்தனை புரிந்து நின்று வாழ்த்துக மலாரி பாதம். (௫௫)

வாசக விதியி னாலே மலாரிதன் மயலிங் கத்திற்
பூசனை புரிந்தான் பின்பு வலம்புரிந் திடானே யாகி

லாசுள னன்ப னல்லன் விடம்பனே யவனு யுங்காற்
றேசிக னென்னப் பட்டான் வலஞ்செயுந் தெள்ளி யோனே.

சரியையுங் கிரியை தானுஞ் சால்புள யோகந் தானு
மதிதனுட் டிக்கை யார்க்கும் விதியினு லாத லாலே [யில்
பரிவுடன் படர்ந்து பாங்கால் வலஞ்செய்தோர் பரமன் கோ
வரசிவ புரத்தின் வாழ்வர் முத்தியு மெல்ல வாய்க்கும். (௩எ)

வேறு.

நினையி னொருகா னேரிழையை நீங்கும் பிரம சரியந்தான்
மனையின் வாழ்க்கை வனத்துறைதன் மற்றையதிவன்றுச்சிர
மெனுமிம் மூன்று மியல்வழியி னியற்ற லரிதா தலினுலே
வினையை வெல்வார்வலம்புரிகவிமலன்கோயில்விழைவறவே.

வேறு.

மன்னிடுஞ் சிவன்றன் கோயில் வலம்புரிந் திடுவா மென்றே
யுன்னிடு மளவி லோடு மிம்மையி னுற்ற பாவ
முன்னைய வுடலந் தோறு முற்றிய பாவ மெல்லா
மன்னிய மாஞ்சென் றீச னுலய மடையும் போதில். (௩௯)

அடிதொறு மசுவ மேத யாகத்தின் பலம தாகும்
படிதனைப் பார்த்து மெல்லப் பதத்தினை வைத்துக் கீட
மடியுமெய் வருந்து மென்றே மனந்தனி லுருகிச் செல்க
வடிகளா லயத்து வட்டத் தகத்துனி யமலன் பாதம். (௪0)

நிறைந்தகர்ப் பிணிதா னெண்ணெய்நிறைகுடந் தலையின்மீதே
யுறைந்திட நிகளங் காலி னுறமெல நடத்தல் போல
மறந்திடா தமலன் பாத மனத்துற வலமுஞ் செய்க [தே.
சிறந்தவைந் தெழுத்துஞ் செப்பிச்செபவடங் கரத்திற் சேர்த்

வேறு.

ஒப்பா ரில்லான் சிவனமல னுறையுங் கோயின் முதலதனுக்
கப்பா லிரண்டா மாவரண மூன்று குவதே யதற்கப்பா

லப்பா னுலா மாவரண மைந்தா குவதே யதற்கப்பா
லப்பா னூரின் புறமதனோ டாறும் வலஞ்செய் யாவரணம். ()

ஆதி தன்னிற் புரிவலத்தி னதிக மிரண்டா மாவரணத்
தோது மிந்த முறையிங்கு முயரும் பலமொன் றினுக்கொன்று
நாத னுயிர்கட் குயிர்நோய்க்கு மருந்த னமல னமபனவன்
பாத மலரைப் பரிந்துளத்தி லவற்றின் வலஞ்செய்வதுபாங்கே.

ஆலயதரிசனஞ்செய்வார் நிற்குமெல்லை.

வேறு.

புகுந்திடா தூரி னுள்ளோர்ப் புறத்தினி னமல னென்றே
திகழ்ந்தகோ புரத்தைக் கண்டு சிலர்பணி வாரு முண்டு
புகுந்தரும் புரியி னுள்ளே கோபுரத் ததிது ரத்துற்
றகந்தனி லரனை யுன்னிச் சிலர்பணி வாருண் டன்பால்.(சச)

கோபுரத் தருகு சேர்ந்து கும்பிடு வாரு முண்டு
கோபுரத் துள்புக் கப்பாற் கும்பிடு வாரு முண்டு
தாபர பலிபீ டத்தைச் சார்ந்திடா தயனிற் பாரு
மாபர னென்று பீடம் வணங்கிடு வாரு முண்டே. (சரு)

அரங்கிடை யடைந்து நின்றே யடிபணி வாரு முண்டு
பரந்தமா மண்ட பத்தின் புறக்கடை பணிவா ருண்டு
னிரந்துநின் றிறைஞ்சு வாரு முண்டுநின் மலன்பா தத்தைப்
புரிந்திறைஞ் சுவாரு முண்டே யருத்தமண் டபத்துட் புக்கே.

வேறு.

அப்பாற் புகுந்து ளாலயத்தி லமல னசலன் சிவனகள
ஞெப்பா ரில்லா னுயர்ந்தாரு மில்லா னுயிர்கட் குயிராகி
மெப்பா லினுநீங் காதிருக்கு மிறைவ னிலங்கு மிலிங்கமய
மெய்ப்பா லிதியா லருச்சிப்பீர் சுத்த சைவர் விழைவுடனே.()

## ஆலயதரிசனஞ்செய்யும் அந்தணர்முதலியோருள் இன்னார் இன்னவெல்லையினிற்பரெனல்.

வன்பார்ந் திலங்குங் கோபுரத்தை மகிழ்ச்சி யுறக்கண் டேர்ப்புறத்துற், றன்பால் வலஞ்செய் தமலனெனப் பணிவர் புலையரடைந்தாரு, ளின்பார்ந் திலங்குங் கோபுரத்தி னதிதூ ரத்துற்றிறைஞ்சுவர்தாள், வன்பார் மயிர்கொய் பவரிருந்து கழுவும் வண்ணார் மற்றையரும். (சஅ)

கோல மாருங் கோபுரத்தின் புறத்தே குறுகிக் கும்பிடுவர்
மாலை கார ரெண்வணிகர் முதலோர் மனத்தின் மகிழ்வுறவே
கால காலன் கழறுமியல் விதியைக் கடக்கை கடனலவென்
றேலும்பலத்தையிவர்பெறுவரியலைக்கடந்தாரென்பெறுவார்.

வேறு.

பொற்றைநிகர் கோபுரத்துட் புகுந்தாய ரெழுவாயர்
வெற்றிலைவா ணிகர்முதலோர் விமலனடி யிணைபணிவர்
மற்றையர்நா லாம்வரண * வாய்தலின்முன் பணிந்தெழுச
பற்றினரேற் றீக்கைபலி பீடத்திப் பாற்பணிவார். (ருo)

வருமுறையாற் சூத்திரரு மிரண்டாமா வரணத்திற்
பரமசிவன் சந்நிதியிற் பலிபீடந் தனிற்பணிக
பொருவருமா மண்டபத்தின் புறக்கடையிற் பணியலுமாம்
பெருமைதருஞ் சிவதீக்கை யிணையவர்தாம் பெற்றாரேல்.(ருக)

ஆக்கையினை வெறுத்திவர்சை வாச்சிரமத் தினையடையின்
பார்க்கலுமா மண்டபத்தி னுட்புகுந்து பசுபதிதா
ளேக்கவருள் வாய்தலினால் வசியர்மனு நான்மன்னு
ராக்கமுறு நவெடைந்து பணிவாரீக ளமலனையே. (ருஉ)

---

* ஆவரணம் என்பது - வரணம் எனத் தலைக்குறைந்து நின்றது.

சிரத்தினுறத் தெண்டுதனைச் சிவன்முன்னே தேசிகனுற்
றரித்தரங்கிற் புகுந்துபணிந் தாடுவளே தளியில்லாள்
பரித்துவச்ச னுபதேசம் பணிந்தரங்கிற் பரநமுணர்ந்
துருத்திரகன் னியர்தம்மை யாட்டுவிப்ப னுகப்புறவே. (ருந)

வேறு.

அருத்தமண் டபத்திட் புக்கே யந்தண ரமலன் பாதங்
கருத்தினுங் கண்டு வாழ்த்திக் கைதொழு வார்நா லேழுந்
தரித்துநால் வேத மாதி தன்னையு மமலன் மேனி
யருச்சனை செய்வார் சுத்த சைவருட் புகுந்தன் பாலே. (ருச)

அந்தண ரரையர் மற்றை யனைவரு மமலன் பாத
வந்தனை செய்யு மெல்லை முறையுற மதித்துச் சொன்னோம்
பந்தனை யறவே பாங்கா லவரெலாம் பணியு மாறுஞ்
சிந்தனை செய்தே யீசன் றிருவடி செப்பு வாமே. (ருரு)

அந்தணர்முதலியோர் பணியுமுறைமை.

உத்தர திசையிற் காலை நீட்டிட * லொருகா லத்து
மித்திறம் பதத்தை நீட்ட * லிந்திர திக்கி லென்றும்
பத்தர்கண் மேற்குந் தெற்கு நீட்டுக பாதந் தன்னை
வித்தக விலிங்கந் தன்னைப் பணிபவர் விரும்பி வீடும் (ருசு)

தேசிகன் றன்னைத் தேவர் திருவடி தன்னை யீச
னேசரைச் சந்தி தோறு நிருமலன் றனையர்ச் சிக்கும்
பூசுரர் தம்மைத் தந்தை தாய்தனைப் பணியும் போதுங்
காசினைக் கடிவார் நீட்டல் * வடக்கினுங் கிழக்குங் காலே. ()

வழியிடை நடக்கும் போது மலரினைக் கொய்யும் போதும்
விழுமியர்க் கீயும் போது முத்தர வினையின் கண்ணு
மெழுதிடும் போதும் வாய்மை யியலினை யிதழின் கண்ணே
யழகுறு மரையர் பாற்சென் றடைந்தமர்ந் திருக்கும் போதும்.

* நீட்டிடல் - நீட்டற்க.

புனலிடை மூழ்கும் போது நியதியைப் புரியும் போது
மனலினை யோம்பும் போது மருச்சனை செய்யும் போது
மனையிடை யருந்தும் போது மலசல மாற்றும் போதும்
பணவரைக் குரவர் தம்மைப் பதம்பணி வதுபாங் கன்றே. ()

நாலிரண் டைந்து மூன்றொன் றென்றுசொன் ஞமைத் தாலே
யேழுமங் கந்தா ஞன்கா மிவைகளா டவருக் கேய்பு
நாலிரண் டல்லா வெல்லா நாரியர் தங்கட் காகு
நாலிரண் டாதி யங்கங் களுமினி நவிற்று வாமே. (௯0)

பூர்வ திசையை நோக்கும் புனிதன்முன் பலிபீ டத்தி
னேருறு மெரியின் கோணத் தெதிரணித் தெல்லை தன்னிற்
சேருறுஞ் சிரத்தை வைத்து நிலத்துறத் திணிய மார்பு
நேருறக் கரங்க டம்மை நீட்டியுத் தாத்து நேசால். (௯௧)

மடக்கியே கரங்க டோளு மண்ணுறத் தெற்கே போக்கித்
திடத்தரை தன்னைத் தீண்டச் செறித்திரு கன்னந் தன்னை
முடிக்கவட் டாங்கந் தன்னை முந்தியே வலப்பால் செய்க
விடப்புறத் தங்கந் தன்னை யியற்றுக வதன்பி னென்றும். ()

சிரங்கர முழந்தாண் மண்ணைத் தீண்டல்பஞ் சாங்க மாகுஞ்
சிரந்தணிற் கரங்கள் கூப்பிற் றிரிவித வங்க மாகுஞ்
சிரந்தனைத் தாழ்த்து நிற்கை தெரியினே ரங்க மாகும்
வரம்பெறு மெட்டு மைந்து மத்திம மூன்றே கம்பின். (௯௩)

தென்றிசை தன்னை நோக்குஞ் சிவனது சந்நி திக்க
ணொன்றிய பலிபீ டத்தி னிருதிதிக் குறுங்கோ ணத்தி
னின்றுமுன் னிகழ்த்து மாற்றா னிமலனைப் பணிக மேல்பா
லொன்றிய சிவன்றன் முன்னு னிருதியிற் பணிக வோர்ந்தே.

வடதிசை தன்னை நோக்கு மலவலி வயிரி முன்னே
திடமுறும் பலிபீ டத்தின் வாயுகோ ணத்தைச் சேர்ந்தே

யடியிணை நீட்டி மேல்பா லமலனைப் பணிக வன்பா
லுடலுரை யுணர்வா லுற்ற தீவினை யொருவ வோர்ந்தே. ()

தினகரன் றன்னைப் பாம்பு தீண்டினே யபரா ணத்தின்
மனமகிழ் வுறவெல் லோர்க்கு மகரமா தாதி வாய்க்கி
லினையகா லத்தின் மூழ்கி யீசனை யிறைஞ்சச் செல்வோர்
தனபதி திசையைத் தெற்கே நோக்கிய விலிங்கந் தன்னில். ()

மேலைய திசையிற் காலை நீட்டிடல் வெய்யோ னந்த
வேலையி னுச்சி நீங்கி யியங்கலான் மேல்பா லந்தக்
காலையி லட்டாங் கத்தைக் காதல்செய் யாதே கைக
ளேலவே கூப்பியுச்சி மேற்றெழு வினிமை யாமே. (கூஎ)

வலம்புரிந் திடுக வாதி மண்டலம் பிரம சாரி
வலம்புரிந் திடமுஞ் செய்க மனையுளார் வனத்து ளாரு
மிலந்துறந் திரந்துண் பார்க ளிடம்புரிந் திடுக வென்றும்
விலங்கென வுடலந் தன்னை வெறுத்தது மெய்யே யாயின். ()

பத்தியாம் வலத்தி னாலே பொருவரி தாய நல்ல
முத்தியா மிடத்தி னாலே முறையுற விரண்டுஞ் செய்யிற்
புத்திமு முத்தி தானும் பொருந்திடும் போதந் தன்னில்
வைத்தம லன்பொற் பாதம் வாக்கினால் வாழ்த்து வார்க்கே. ()

வலமிடம் புரிக சைவ தீக்கையோர் முதல்வட் டத்தி
னிலவிடிற் றாபி நீழ னீக்கிமூன் றிரண்டுட் செல்க
விலகிடும் விரிவக் கோயி லுக்கெனைத் தனைத்தும் போகச்
செலுகவுத் தரத்திற் சோம சூத்திர மிதுதான் றேரில். (எ0)

திருவுலாச் செயும்போ தீசன் றிகழ்பெரு விழாவிற் பத்தர்
பரிவுற வுடனே செல்க படர்ந்திடிற் றாபி நீழ
லொருவுத லறவே சூழ்கை யொழுங்குடன்பலியிற்செல்வோர்
பிரிவறச் செல்கை தானும் பிழையன்று பேணுங் காலே. ()

வலம்புரிக் கிலெக தீக்ஷை வரத்தினை யில்லா ரெல்லா
மிலங்கிடு மிரண்டாம் வட்டத் தேனைய வட்டத் துள்ளுங்
குலந்தனி னெய்யார் சைவ தீக்கைகொண் டிடினு முந்துந்
தலந்தனிற் செல்லேன் மற்றைத் தலம்வலம் புரிதல்-சால்பே.

வேறு.

தெரிசித்துத் திடவிடையைச் சென்றிடஞ்சண் டேசன்
றிருவடியைத் தெரிசித்து மீண்டுதிட விடையைத்
தெரிசித்துச் சென்றுவலஞ் சோமதிசை சேர்ந்து
மீண்டிடப்பந் தெரிசித்துத் திகழ்சண்ட னடியைத்
தெரிசித்துப் பராசத்தி யெனுஞ்சோமஞ் சேர்ந்து
மீண்டுதிறற் சண்டனடி தெரிசித்து விடையைத்
தெரிசித்துச் சிவலிங்கந் தெரிசித்துப் பணிக
விதுசோம சூத்திரமொன் றனந்தபலஞ் செயுமே. (எங)

தெரிசித்துப் பிரியும்போ துடலைவலம் புரிக
திடவிடைமுன் சண்டனைமுன் சிவசத்தி மூன்றும்
பரிசுத்தர் தெரிசிக்கும் பராசத்தி நிலவும்
பரமசிவ னாலயத்தின் விரிவுடை பாலிற்
கரிசெற்றிச் சிவபுரம்புக் கமலனடி காண்பார்
கடவாதே புடைநின்று கைதொழுது மீள்க
வரமுற்ற காலத்து மற்றையகா லத்து
மதித்தவள வினுக்கப்பால் வலஞ்செயலு மாமே. (எச)

வேறு.

வைத்தமல னடிமனத்துள் வாக்கினெழுத் தைந்தினையு மருக்கன் றோற்ற, மத்தமய பரியந்தம் வலம்புரிந்தார் சிவாலயந்த மாக்கை யாலே, கைத்தவல வினையினைத்துஞ் சுத்தசிவ தத்துவத்திற் கலந்து வாழ்வர், முத்தியினைப் பெறுவார்க ளண்டமெலா மொடுங்கிநோண் மூலந் தன்னில். (எரு)

ஒருயாமம் வலம்புரியி னுடலினுற் றீவினைக ளொருவு மெ
ல்லாங், கருவாதை யிலர்மண்ணிற் சிவலோக மடைந்தாகளிப்
பரவே வாழ்வர், பெருகார்வத் தொடுமேலைச் சிவலோகம்
பெற்றிருப்பர் பேத மற்றே, பரமேசன் பதமடைவ ரண்ட
மெலா மாயையினுட் படியும் போதில். (எசு)

வேறு.

அருக்கனெல் வாரந் தன்னில் வலஞ்செயி னமலன் கோயில்
பரித்துவம் பத்தி யோடு பகலெலாம் பாதந் தன்னால்
வருந்திடும் பிணிகண் மாயு மதியது வாரந் தன்னி
லருத்தெழு முச்சி தன்னில் வலஞ்செயி னொருயா மந்தான்.()

கண்டனில் வருத்த நீங்குங் காதலுற் றயலான் கொண்ட
பெண்டனைப் புணர்ந்த பாவம் பிரியுமங் களவா ரத்தி
லெண்டிகழ் கடிகை பற்றி யியற்றிடிற் பிணிக ளெல்லாம்
விணடிடும் புதவா ரத்தின் பலத்தையும் விளம்பு வாமே.(எஅ)

வாய்த்திடு முணர்வு பத்துக் கடிகையுள் வலஞ்செய் தார்க்குத்
தீர்த்திடுந் துயரந் தன்னைச் செயின்வலம் வியாழந் தன்னி
லீத்துகந் திடவே யெய்து நிதிவெள்ளி யியற்றி னார்க்குத் [கே.
தேய்த்திடும்வினைத்தீங்கெல்லாஞ்சனிதனில்வலஞ்செய்தார்க்

அட்டமி தன்னின் மூழ்கி யற்றைய நியதி முற்றி
முட்டல வலத்தைச்செய்யிற்கடிகைமூவிரண்டொன்றுள்ளே
கிட்டுவர் சிவலோ கத்தைக் கெழுவுவர் சாமீ பத்தை
யிட்டமுள் ளுறவிவ் வாறு சதுர்த்தசி யியற்றி னாரும். (அ0)

வேறு.

விளங்கியபூ ரணைதன்னில் விதிபாத மமவாசி
துளங்கவருக் கனைமதியைத் தொட்டிடுங்கா லத்தாலங்
களங்கமறு மற்றையருற் காலங்க ளினும்புரிவா
ருளங்கருதும் பலமண்டுவர் சிவலோகத் துறைவாரே. (அக)

வே று.

கணபதிக் கேக மாகுங் கதிரவற் கிரண்டே யாகு
மெணிலொரு மூன்றே யீசற் குமைதனக் கேநான் கேயு
மணிவண ரூன மாலுக் கீரிரண் டாகு மன்னும்
விணின்மதி சூடிக் கின்னும் பலவிதம் விளம்பு வாமே. (அஉ)

வலம்புரிந் திடுக நூறு வாய்த்திடப் பத்து நூறு
மிலங்கவா யிரத்துப் பத்து மிசையவே நியுதந் தானு
நலம்பெறு கோடி தானுஞ் சித்தியை நயந்தார் செய்க
சிலந்தியை யரைய ரூக்கி னவர்க் கிட்டஞ் செய்யும். (அ௩)

வே று.

தந்தை வலத்திற் றசகுணிதந் தாயை வலஞ்செய் வதுதாயி
னைந்து மைந்துங் குரவன்வல மதனிற் றசமால் வலமாகும்
பந்த மறுக்கும் பராபரைதன் வலந்து னதனிற் பத்தாகுஞ்
சிந்தைக்கரியசிவன்வலத்தின்சிறப்பாருணர்ந்துதெரிப்பாரே.

வே று.

உத்தம மூவே ழாகும் வலம்பதி னைந்தோ டொன்பான்
மத்திம மாகு மற்றைக் கனிட்டமே யைந்து மூன்று
மித்திறத் தியன்ற தொன்றை யியற்றுக விரண்டு மொன்றுங்
கைத்திடல் கணக்கே யாதி கடவுளைப் பணிவர் கண்டே. ()

நடந்ததி தூரந் தங்கு நகரினை யடையும் போது
படர்ந்தடைந் தமலன்கோயில் வலஞ்செயிற்பதத்தினுன்முன்
னடந்தன பதவைப் பெல்லாம் வலமெனக் கொள்வ னம்பன்
படிந்துபின் பணிக முன்னம் பண்ணிய பாங்கி னூலே. (அசு)

பணிந்தவ ரவய வத்திற் பற்றிய மணலொவ் வொன்றற்
கெணந்திக ழிமையோ ராண்டா யிரமல ரிரதந் தன்னி
லணைந்தமர்ந் திருப்ப ரின்புற் றமலன்றன் சிவலோ கத்திற்
றணந்திடு மவர்மு னின்ற தறுவினிற் சார்ந்த பாவம். (அஎ)

வேறு.

ஒருமூன் றைந்தே மூதியென வுரைத்த முறையின் வலஞ் செய்து, பெருகார் வத்திற் பணிந்தெழுந்து பேசித் துதியுங் கரங்கொட்டி, யொருவா வுவகை யொடுமோடிப் பின்னும் வல ஞ்செய் தொருப்பட்டே, கருதா வமலன் றிருவுருவ மதனைத் தீனது கருத்துள்ளே. (அஅ)

பணிந்தே பின்னும் பாங்கான தலத்தி னிருந்து பரிவுட னே, யெணந்தன் னுலல் லதுநாவா லியன்ற தியம்பி யெழு த்தைந்துந், தணந்தே யந்தத் தலந்தன்னைப் புகுந்து தமது மனைதன்னுள், வணங்கா வமலன் மலரடியை யிருப்பார்க் குணடோ மணிற்பிறப்பே. (அகூ)

வேறு.

தென்றிசையிற் றுவாரத்தைத் திகழ்பூர்வ திசைதன்னை நோ க்குந் தேவர்க், கென்றுமிடப் பால்பணியே விருந்தியம்பேல் செபந்தனையு மிடப மீச, னென்றவிவ ரிருவருக்குங் குறுக்கி யங்கேல் புறங்காட்டேல் விருகை யல்லா, லொன்றவொரு கர ங்குவியேல் வலந்தன்னை யிடந்தன்னையொருக்காற்செய்யேல்.

உத்தரியத் தொடுபணியே லோங்கியகோ புரச்சாயை கட வே லுண்ணேல், னித்திரைசெய் யேல்கடவே னின்மாலி யந் தனையுந் தீண்டே லீட்டிக், கைத்தலத்தால் விக்கிரகங் களைத் தீண்டேல் காதலுறக் கணிகை மாரை, யத்தமத னுற்றீண்டே லவரொடுபே சேல்விழியா லவரைப் பாரேல். (கூக)

வீண்பேசேல் சபைக்கருக மல்லாத சொல்விளம்பேல் விளம்பிற் கேளேன், மாண்பாருந் தமரையவ மதியேல்புல லியர்தம்மை மதித்துக் கூறேல், காண்பார்கள் கணுக்கினிய கடவுளரும் பொருளினைக்கா தலித்துப் பாரே, லேண்பூண்ட விருக்காதி தனிலியம்பாச் சிறுதெய்வம் பணியே லென்றும்.()

அருமறையா தியும்பயிலே லுன்னததா னத்திலிரே லம்ரேல் பீடத், தொருவரைப்பார்த் துறநகையே லூடன்முதற் ருத்திரத்து ளொன்றுஞ் செய்யேல், வரமுடைய வியலன்றி மற்றையபா டலேமனத்தின் மதித்துக் கேளே, றிரிவிதமா கிய சந்தி யல்லாத காலத்தா லயத்துட் செல்லேல். (கூ௩)

வலமிரண்டொன் றிவைபுரியேல் வரமான பாடலெரி பண்ணை யன்றிப், புலியவிய லொடுபொருந்தும் புறநீர்மை முதற்பண்ணும் புரிந்து பாடேல், சொலியவிவை யெண்ணொன்கு ளொருகுற்றந் தனைச்செய்யிற் றுயக்கத் தாலே, நிலவு வருூ மறைதன்னு ளுருத்திரத்தை நிகழ்த்தலுமம் மாசு நீங்கும்.

அருமறையின் வாகியம்ப வருகரல்லா ரறைந்திடுக வகோரந் தன்னைக், கருதியுளத் தாயிரமக் கரிசொழியும் புத்தியொற் கருதிச் செய்தா, ரெரிநிரயத் தழுந்திடுவ ரிதற்கில்லை பரிகார மியலு ளிந்தத், துரிசுதனைத் துயக்கத்தாற் புரியற்க விழைவாலே துய்யோர் தாமே. (கூ௫)

எணியபழு தெண்ணான்கு ளொன்றினையு மியற்றுதே தமக்கா மெல்லை, பணிபவரே பணிந்தபலம் பெறுவார்க ளப்பாலும் படர்ந்து செல்வா, ரெணமிலரென் பெறுவரவ ரிகழ்ந்திடுவர் பணிந்தபல மியலா ராய்ந்து, திணமுடைய தேசிகனு மன்னவனுற் செய்விக்கிற் சிறப்புச் சேர்வான். (கூ௬)

வேறு.

தந்தமக்குத் தக்கதலந் தனினின்று தலையாலும்
வந்தனையைப் புரிவார்கள் வந்தவழி மதித்தறைவாஞ்
சிந்தனைசெய் திடுகவினைத் திறமுணர்ந்து சிவனருளாற்
கந்தமல ரயனவரைப் படைத்தனன்றன் கவினுடலின். (கூ௭)

அந்தணர்முதலியோருற்பத்தி.

அந்தணராண் பெண்முறையோ டவன்முகத்தி னுதித்தார்கள்
வந்தனர்பின் புயந்தன்னின் மன்னருமாண் பெண்முறையாற்

பந்தமுடன் வசியரவ னூருவினுற் பவித்தார்கள்
சுந்தரத்த பதத்துதித்தார் சுத்தமொடு சூத்திரரும். (கூஅ)

ஓதலரு மறைமுதனூ லோதுவித்த லுயிர்க்கிரங்கி
யீதலிரந் திடலியற்ற லியற்றுவித்தன் மறையோர்க்காம்
பூதலத்தை யோம்புதன்மூன் றாச்சிரமம் புரிதன்மறை
யோதலிவை மனர்க்குரிமை யினிவசியர்க் குணர்த்துவமே. ()

ஓதலரு மறையினையு முயிர்க்கிரங்கி யுளதொன்றை
யீதலுழ வோம்புதலா னிலந்தன்னை யெப்பொருளு
நீதியுறக் கொளல்விற்கை நிற்றலிரண் டாச்சிரமத்
தேதமிலாச் சூத்திரர்க்கு முரியதொழி லினையிசைப்பாம்.(க00)

அந்தணரா ரியர்தமக்கிங் கனுகூலம் புரிந்திடுதல்
சிந்தனையின் மகிழ்ச்சியுறச் சிறந்தமனை தனில்வாட்கை
வந்திரந்தார்க் குள்ளதனை வஞ்சனைசெய் யாதுதவன்
மந்தமற வுழுதுவிளைத் திடல்சாலி வயலினுமே. (க0க)

அந்தணரா தியருதய மவர்செயலு முறையறைந்தாந்
தந்தையுயர் குலந்தாழ்ந்த குலந்தாயென் றியம்பியிட
வந்துதித்தா ரனுலோமர் மதிக்கிலவர் தாமெழுவ
ரிந்தவனு லோமரெழு வரையுமினி யியம்புவமே. (க0உ)

அநுலோமருற்பத்தி.

வேறு.

அந்தணன்று னரையர்குலக் கன்னிதனை யலர்சூட்டி யணை ந்த போது, வந்தவன்சே னுபதிமன் னலன்மன்ன வர்க்கொ ப்பன் மதித்தி டுங்கா, லந்தமறை யவன்வசியர் கன்னிதனை யலர்சூட்டி யணைந்த போது, வந்தவன்பேர் மருத்துவனன் மருத்துவநூ லாய்ந்துபிணி மாற்று வானே. (க0ங)

முன்மொழிந்த வந்தணன்று னசுரமென் மணத்தினுன் மொய்யார் மன்னர், கன்னிதனைக் கல்த்தனுமே கவித்தவனே

கிழ்மையுடைக் கணக்கன் றற்றே, நன்னிலைநா வினையாய்ந்து விதிவழியா னுன்முகனைப் பூசை செய்வன், மன்னவர்தம் மாளிகையிற் கணக்கெழுதி யவர்முன்னே வாசிப் பானே. ()

சூத்திரர்தங் கன்னிதனைச் சுருதிமறை யவனலரைச் சூட்டித் தோய, வாய்த்தவன்பேர் பாரசவ னவனுவச்ச னெனப் பகர்வர் மதித்திடுங்காற், சீர்த்திகழுங் காளிதனை யருச்சிப்பான் யாமளத்தின் விதியைத் தேர்ந்தே, வார்த்திகழ்மத் தள முழக்கு மாதர்நடஞ் செயுங்கான்மா தேவன் முன்னே. ()

வே று.

வேந்தன் வசியர் கன்னிதனை விதிநூல் வழியி லணைதலுமே,வாய்ந்த வன்பேர்மற் குருசெட்டி வசியர்க் கொப்பான் மலைமிளகு,மேய்ந்த விஞ்சி மஞ்சண்முத லெவையுங் கொள்வ னிவைவிற்ப, ளுய்ந்த விதியந் தணர்க்களிப்ப னரிசி கறிமற் றனைத்தினையும். (க0கூ)

பகர்ந்த வரையன் சூத்திரர்தம் பாவை தன்னைப் பகர்விதியா, லுகந்து புணர வுற்பவித்தான் பெயர்தெண் டகனென் றுரைத்திடுவர், திகழ்ந்த வரையர் புடைசெறிந்து பிழைசெய் தவரைத் தெண்டிப்ப, னிகழ்ந்த முறையா லவரேவப் பெறுவன் வாரா நிதியினையும். (க0எ)

வளமார் வசியர் சூத்திரர்தங் கன்னி தன்னை மணம்புணர, வுளமா தரவு பெற்றிடவே யுதித்தான் பெயர்சூ சுகனவனே, யெளியா னிவன்வெற் றிலைவணிக னென்ப ரெவரு மவன் விற்பன், மௌவே சென்று வீதிதொறும் பாக்கும் வெள்ளை வெற்றிலையும். (க0அ)

அறைந்த விவர்க ளனுலோம ரறுவ ரொமெற் றொருவரிவர் நிறைந்த விதியாற் சிவதீக்கைச் சூரியா ரென்வே நினைகழுதற்

சிறந்த வந்த நால்வருந்தே சிகரா. வாரே சிறப்பின்றிப்
பிறந்தார் பிரதி லோமரவர் தமையு மினியாம் பேசுவமே. ()

பிரதிலோமருற்பத்தி.

வேறு.

சூத்திரன் வசியர் கன்னி தோண்மணம் புணர்ந்த போது
வாய்த்தவ னயன் மேய்ப்பன் வனத்தினு னினங்க டம்மைப்
பார்த்திவர் கன்னி தோளிற் படிதலு மவனப் போது
வாய்த்தவன் கள்ளு விற்கும் வணிக னூர்ப் புறத்து வாழ்வான்.

அந்தணர் கன்னி தோளை யணைதலு மவனப் போது
வந்தவன் புலையன் வாரை வாய்த்துறக் கழுத்திற் கட்டிப்
பந்தமுற் றிடத்தன் றோளிற் சல்லரி பறையுங் கொட்டு
முந்திய பகலூர்ப் புகரு மாற்றுவன் முடையூன் மற்றும். ()

மாலையுஞ் சூட்டி மன்னர் கன்னியை வசியன் றோயச்
சாலியன் சனித்து நூலாற் சமைப்பனே யாடை தன்னை
நாலிய லந்த ணாளர் நங்கைதோ ணண்ணும் போது
பாலையாழ் பயில வல்ல பாடுவான் பிறப்பன் பாங்கால் (கக௨)

மன்னவன் மறையோர் கன்னி தனைமண வினையாற் புல்லச்
சொன்னிலை துணிய வல்ல சூதனுற் பவிப்ப னீதி
பன்னியே யறிவன் முந்திப் பகர்ந்திடு மிருவர் தாமு
முன்னிடி லிவருஞ் சைவ தீக்கையி னுரிய ராவார். (கக௩)

வேறு.

உரைத்தாமே யாம்பிரதி லோமரையு மினியுரைப்பாங்
கருத்தார்ந்த கள்ளத்தாற் காதலித்துப் பிறர்மனையைப்
பரித்தேயந் தணர்முதலோர் புணர்தலுமே யுற்பவித்தார்க்
குரித்தான பெயரந்த ராளிகளென் றுறுமுறையும். (கக௪)

## அந்தராளருற்பத்தி.

பண்டிகழு மறையாளன் மற்றொருபார்ப் பான்பரித்த [ம்பேர்
வொண்டொடியைப் புணர்தலுமே யுற்பவித்தான் றனக்குறு
குண்டகன்கோ ளகன்விதவை யொடுகூடி தலும்பிறந்தா
னுண்டிவர்க்கு முபவீதஞ் சிகையுமறை யோதாரே. (௧௧௫)

வேந்தர்குலக் கன்னிதனை வேதியன்சோர் வொடுபுணர
வாய்ந்தவன்பேர் கணிகனவன் மதித்தங்க மிருமூன்று
மாய்ந்துபல கலையினையு மறிவிப்பன் வருபலமுந்
தோய்ந்திடினு மிவர்வசியர் கன்னிதனைச் சோரத்தால்.(௧௧௬)

வேறு.

வந்தவன் கும்ப காரன் மறையவர் செனனந் தன்னி
லந்தழாங் காலத் தும்மந் தணர்முக மயிருங் கொய்வன்
பந்தமாங் கருவி யாலே யவர்தலை மயிரும் பாரின்
முந்திியே பணுவன் கும்ப மாதியை மூகக்க நீரும். . (௧௧௭)

தோயவந் தணன்முன் சொன்ன குலத்துள விதவை தோளை
யாயவன் கணக்கன் யாக மந்தணர் புரியு நாளில்
வாயின்மந் திரமுஞ் சொல்லி யவர்வயின் மார்பு ரோம
மேயவே கொய்வ னூருக் கெழுதுவன் கணக்கெந் நாளும்.

சூத்திரர் கன்னி தோளைச் சோர்விலந் தணன்றன் றோய
வாய்த்தவன் வரையுள் வைகும் வாளர விளையும் பற்றி
யார்த்திடப் பலரு மாட்டிப் பற்றியாங் கவரீ பண்ட
மேத்திியே யவரை யென்றுந் திரிவனே யெளிய னுயே. ()

அந்தணர் கன்னி தோளை யணைதலு மரையன் சோர்வில்
வந்தவ னூருந் தேரை வகுத்திட வல்ல தச்சன்
புந்தியின் மகிழ்ச்சி பொங்கத் தங்குலப் பெண்ணைப் புல்ல
வந்தவன் பெயரே போசன் மன்னலன் மன்னர்க் கொப்பான்.

வசியர்பாற் கன்னி தோளை வஞ்சனை யதனாற் புல்ல
விசைபவன் குதிரைச் செட்டி யேனையர் கன்னி தன்னை
நசையுடன் புணரச் சூலி யென்னுநா மத்தான் றோன்றி
யசைவற வரையர் சூலம் பிடித்தவர்க் கனுக னுவான். (கஉக)

கூர்த்தவா தரவாற் சோர்விற் பனத்தியை வசியன் கூட
வாய்த்தவ னுடை தன்னின் மாசினை மாற்றும் வண்ணான்
பார்த்திவர்பெண்ணைப்புல்லப்பகழிவேடுவன்றோன்றோன் றுஞ்
சேர்த்ததங் குலப்பெண் சோர்விற் சங்கரி செட்டி தோன்றும்.

வேதியர் குலத்துள் வந்த விதவைதோ ளிவன்றான் றோயத்
தூதனே யென்னும்பேரோன் றோன்றுவனவன்றான் மன்ன
சோதிய வுரையைக் கேட்டே யுணர்த்திமற் றவர்பாற் போகி
யீதவ ரிசைத்த மாற்ற மென்றுவந் தியம்பு வானே. (கஉ௩)

சூத்திரர் கன்னி தோளைத் தோய்தலு மவன்சோ ரத்தால்
வாய்த்தவன் பெயரே தந்து வாயனா லிழையி னீலே
போர்த்திடும் படத்தை செய்வன் புரிவொடு பனத்தி தோளைச்
சூத்திரன் சோர்விற் றோய மரக்கலத் தச்சன் றோன்றும். ()

வேந்தர்தங் கன்னி தோளை விழைந்திவன் சோரவிற் புல்ல
வாய்ந்தவன் மூங்கி லாலே பாய்முறம் வகுப்பான் றோன்றுந்
தோய்ந்திட வசியர் கன்னி தோளினைச்செக்கான் றோன்றும்
வாய்ந்ததங் குலப்பெண் புல்லப் புல்லரிஞ்சான்றோன்றோன் றும்.

ஆந்தரா ளிகரைக் கொய்தே யறைந்தன மினியா ராய்ந்
தே, வாய்ந்தநாற் குலத்தி லுள்ள மாதரை யனுலோ மாதி,
தோய்ந்திடத் தோன்றுகின்ற விராத்தியர் தமையுஞ் சொல்
வாம்,பாய்ந்தெழு மவர்தந் தோற்றந் தொகுத்தினிப் பகர்வாம்
பார்மேல். (கஉ௬)

## விராத்தியருற்பத்தி.

மருத்துவன் பனத்தி தோளை வாஞ்சையான் மணந்த போது
மரக்கல மீகா மன்றான் வருவன்மா நிதியஞ் செட்டி
விருப்புடன் வேந்தர் கன்னி தனைவிழைந் தணைந்த போதி
லுரத்ததா ளுதித்த ரோமங் கொய்பய னுதிப்ப னன்றே. ()

விரும்பியே பனத்தி தன்னை வெற்றிலை வணிகன் புல்ல
மரங்களான் மனைக ளாக்க வல்லகம் மியன்றான் றோன்றும்
பரிந்தவன் பரித்த போது பார்த்திவர் பாவை தன்னைப்
புரிந்தபூ மாலை காரன் புவனியிற் றோன்று வானே. (௧௨௮)

அந்தணர் கன்னி தோளைச் சாலிய னணைந்த போது
வந்தவன் றோலி னூலே வாருறை யாதி செய்வான்
புந்தியின் மகிழ்ச்சி பொங்க வசியர்தம் பெண்ணைப் புல்ல
மந்தனே யென்ன யாரும் வருவன்மீன் வலைய னங்கே. ()

வேதியர் கன்னி தன்னை விழைந்துகள் வணிகன் புல்லச்
சாதனோர் சகத்தி னன்கு குலத்தினுட் சனித்த நீதி
மாதர்க ளாடை தன்னி லிருதுவை மாற்றும் வண்ணான்
சீதநீர் தன்னி லந்தக் குளத்துநீ ருயர்ந்தோர் தீண்டார். ()

புரிவுடன் பனத்தி தோளைப் புணர்தலும் புலைய னந்நாட்
பரிவுறப் பிறந்தான் றன்பேர் பகர்ந்திடிற் சுபச னுயை
யரிவனட் டதனைத் தின்பன் சுடலையி லமர்வ னாருண்
மருவிடா னவரைப் பாரார் மறையவர் மன்னர் தாமும். ()

இன்னுமுண் டெணப்ப டாத விதம்பிறப் பி * வற்றின் வாரா
நன்னெறி தனையுஞ் சொல்வா மின்னிநர ருய்ய நாடிற்
சின்மய னநாதி முத்தன் சிவனவன் றனையர்ச் சிக்கி
லின்னியல் விதியான் மேலுற் றிருப்பர்கள் வீடு மெய்தும். ()

---

* இங்ஙனந் தொகுத்துரைக்கப்பட்டனவும் பிறவுமாகிய பிறப்புவிதங்கள் சுப்பிரபேதஞ் சூதசங்கிதை முதலியவற்றில் விரித்துரைக்கப்பட்டன.

வேறு.

மணவினையுஞ் சிவலிங்க மயமாக்கி யருச்சிக்க மலமிலா
னைத், திணியசிலை செம்புவெள்ளி பொன்மயத்துந் திகழ்படி
கந் தனினுஞ் செய்ய, மணிமயத்தும் வாணலிங்கந் தன்னி
னும்வா ளொளிவாய்த்த விரதத் தாலே, பணியசிவ லிங்கத்து
மர்ச்சிக்க வொன்றினுக்கொன் றேற்றம் பார்க்கில். (௧௯௩)

வரையினுய ருச்சிதனின் வகுத்திடுக மண்டபத்தை வரமா
ராற்றின், கரையினுமாங் கடவுளம ராலயத்து மடந்தனிலுங்
சட்ட லாகு, முரமுடைய சிலையாலு முழமொன்பா னேழை
ந்து மொருமூன் றென்ற, விரிவுறநாற் கோணத்தால் வட்டத்
தாற் புரியலுமாம் விதியி னாலே. (௧௯௪)

வேறு.

திசைநான்கு முறவாய்நல் செய்திடுக சிறப்புளதென்
றிசையொன்றிற் செய்யலுமாஞ் சிவபூசை யினைச்செய்வா
னிசையநடு வேயதனில் வேதிகையை யியற்றிவட
திசைநோக்கி யிருந்துசிவ பூசையினைச் செயல்சிறப்பே. (௧௯௫)

அந்தணர்முன் னொருநால்வர் சிவதீக்கைக் கருகரவர்
சிந்தைமகிழ் வுறப்பூசை செய்கசிவன் றிருவடியிற்
புந்திமகிழ் வுறப்பூசை யனுலோம ரும்புரிக
தந்தமக்குத் தக்கவெலை மண்டபத்திற் றனித்தனியே. (௧௯௬)

நீர்மூழ்கி விதிமுறையா னியதியினைப் புரிந்ததன்பின்
பார்நீடு மலராதி பறித்தபிடே கம்பணற்கு
நீர்வாய்ந்த குடத்தெடுத்து நிவேதனத்துக் குரியனவுங்
கூர்வாரு மாதரவாற் கொணர்ந்துறை வறக்குவித்தே. ( )

பரித்துறவே மவுனத்தைப் பஞ்சவித சுத்தியினை
விரித்துவிதி முறையாலே. விமலனையர்ச் சனைபுரிக

வுரித்தான வுபசார மெண்ணிரண்டு முற்ப்புரிந்தே
கருத்தாலே கொடுக்கவுப சாரநிதி கையினிலார். (கஙு)

இருதூணி யுத்தமமே நிவேதனத்துக் கெனவெனுக
வொருதூணி தண்டுலத்தை மத்திமமென் றுணர்ந்திடுக
விருகுறுணி யொருகுறுணி கனிட்டமிது தனிற்கனிட்ட
மிருநாழி யையுழக்கு றுமையினு மிகழ்வாமே. (கஙகூ)

முற்றியபின் சிவபூசை வலம்புரிக மூவேழு
மற்றையமூ வைந்தாகி மதித்துமனத் தமலனடி
பற்றிருக்கும் பசுபதியைப் பராபரனைப் பணிந்தெழுந்து
சொற்றுதியுஞ் செய்திடுக பண்ணினொடு சுவையுறவே. (கசo)

பொருந்திடுவன் வலம்புரிந்தான் புகழ்பூசா பலந்தன்னைப்
பரிந்துவலம் புரியாதான் பத்தனலன் பார்புகழப்
புரிந்தவனே சிவபூசை பொருள்கருதிப் புகழ்வானேல்
வரந்தனைத்தான் சிவனருளாற் பெறவலனோ வஞ்சகனே. ()

ஆதலினுற் பிறப்பிறப்புக் கஞ்சினர்க ளமலனவன்
பாதநிழ லடைந்திருக்கும் பரமபலம் வாஞ்சித்தா
ராதிநடு வந்தமிலா வமலனடி யருச்சித்துப்
பாதமுற வலம்புரிக பணிகதுதி பண்ணுகவே. (கசஉ)

திரிகாலஞ் சிவபூசை யினைச்செய்க திடமில்லா
ரிருகாலம் புரிந்திடுக விம்முறையு மரிதாகி
லொருகாலம் புரிந்திடுக வோகையுற வதன்பின்பு
பரிவோடு படர்ந்துவலம் புரிகபசு பதிகோயில். (கசஙு)

முறையுறவே பணிந்துதுதி மொழிந்தொளிரு முகரத்தி
னுறையுமெதிர்ப் பட்டவுரு வம்முறைநீ னுள்ளத்தி
னிறையசிரு மலன்கோயி னெஞ்சகத்தி லிருத்தியன்ன
மறையவர்க்கு மாதவர்க்கு மருத்துகதம் மனைபுகுந்தே. (கசச)

வேறு.

என்றிசைததா னெழிற்கமலத் தவிசினிலங் கயன்சனக முனிக்கின் பெய்த வென்றருளாற் சூதமுனி யிருக்குமறை மாதவத்தோர்க் கெண்ண மொன்ற, வன்றருளிச் செய்தவழி யாராய்ந்திம் மண்டலத்துள் ளாரு மெண்ண, வின்றிசைத் தேன் முருகுத்திலங்கு மருணகிரி தன்னையென தெணத்துள் வைத்தே. (கசரு)

வேறு.

வெய்யவன் காலனை வீட்டினனே வீறுள மாறில வீட்டினனே, தையலர் முன்னர வாட்டினனே தசமுகன் றோள்பல வாட்டினனே, பைதலெ னென்றிடர் பாற்றினனே படர்சடை மேனிரப் பாற்றினனே, நையலென் றென்னுள நாட்டினனே ஞானமண் ணுமலை நாட்டினனே. (கசசு)

ஐந்துடை னுண்டு மடக்கினனே யால மிடற்றி னடக்கினனே, பந்தமெய் யன்பர்க் கறுப்பவனே பத்தர்தம் மையைக் கறுப்பவனே, சந்திர சாபந் தடுத்தவனே தவத்தினர் பால்வந் தடுத்தவனே, கந்தனைப் பெற்றநற் காரணனே கருத்திலகு கும்மிருக் காரணனே. (கசஎ)

வேறு.

முனைவினைத் திறத்தினு முதிரவுற் றுடற்கணு
யினியெமக் கொழிப்பரா ரெண்மனத் தினைப்பிர்கா
ளனுசயத் தை * யற்றுநீ ரருணவெற் பகத்துனீர்
தனையளிப்ப னெப்பிலா தவனுடற்ற பெப்பனே. (கசஅ)

கருவினைக் கழிக்கலாங் கரியகட் டழிக்கலா
மொருமையுற் றிருக்கலா மொளிருநிட் களத்துநீ
ரிருவருக்கு மெட்டொணு வெரிமயக்க னத்தினு
மருணவெற் பகத்துனீ ரயர்வினைத் தடுத்துமே. (கசகூ)

வலம்புரிசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ருசகூ.

---

அனுசயம் - வெறுப்புமிகுதி.

## ஆலயத்தொடுபுரியாக்கியசருக்கம்.

கவளக் கிரியைப் புரைகற் பகனைத்
தவளப் பொடியைத் தகமெய்க் கணியும்
பவளத் திருவத் தனைமுற் பணிவாம்
மவலத் தினையற் றமலத் தடைவான். (க).

வேறு

உருவுடல மிருவினையு மொருவவிருண மலமும்
பொருவரிய பரமசிவ னடியினொடு புகவுந்
தருணமதி யுடனரவு சடைமுடியி லணியு
மருணகிரி யமலனிணை யடிமுடியி னணிவாம். (உ)

இருவரய னரியிவர்க ளிகலியெதிர் பொரலுந்
தெரிவரிய வெரியிதென வவர்களெதிர் திகழ்வோன்
வெருவியவர் பணியவருள் புரிவிமல னெழிலா
ருருவினொடு பிரிவரிய வுமைபதமு முறுவாம். (ங)

வேறு.

அருணகிரி தனையமல னாலயத்தை வலஞ்செய்
யடைவுரைத்தாஞ் சனகமுனி யயனடியிற் பணிந்தே
தருணமதிச் சடைமுடியா னேவலின்விண் டபதி
சமைத்தனனா லயந்தன்னைப் புரிதனையு மென்றாய்
விரியவிளம் பவன்சமைத்த விசித்திரத்தை யெனலும்
வேதனவன் றனக்குரைத்த வித்தாரத்தைச் சூதன்
கருதியருந் தவருணரக் கட்டுரைத்த முறையுங் .
கணியுரைப்பாங் காசினியோர் கருதியிடக் கற்றே. (ச)

வேறு.

கற்பாந்தக் தனிலமரர் கம்பியனை வருகவெனக் கடவு ளே
வச், சிற்பாதி யியலெல்லாந் தெருண்டவவன் வந்தசிவ னடி

முன் வீழ்ந்தே, நற்பாவி னிசையாலே நயந்துதுதித் தென்னு
ற்செய் பணியை நம்ப, பொற்பாரற் புதவருணப் பொருப்ப
வருள் புரியென்றே புகன்று நின்றான். (ரு)

ஆக்கிடுக வெமக்கருக மாகியவா லயந்தனைமண் டபமற்
றெல்லாங், தேக்குபுனற் றிருக்குளமுந் திருவீதி யொடுபுரியுஞ்
செய்கென் றேவ, வாக்கினுக்கு மரும்பொருளே திருவண்ணா
மலைமருந்தே மணவின் மற்று, மாக்கியடக் கிடுவாய்நின் னரு
ளாலே சமைப்பனெனப் பணிந்தே யன்பால். (சா)

வே று.

மூவுல குந்தொழு துய்யமு னைத்தெழு லிங்கந்தான்
மேவியு கந்தம ராலய மேதினி யோர்காணத்
தேவரு நாடிட முற்றியு றும்படி சிந்தித்தான்
யாவரு மற்புத மெய்தவி னங்கிய தோரார்ந்தே. (எ)

ஏலுறு மண்டப மாவர ணம்பல வேறோடே
மேலுயர் கோபுரம் வீதிகண் மாளிகை மீதாரக்
கோலிய பாலமு றப்புடை யாழிய கூபாதி
சாலமு ரங்களு நான்முறை யோடமைத் தானே. (அ)

வே று.

ஆதிநடு வந்தமிலா னமலனுறை யுங்கோயி லாதி யிப்பால்,
வேதியர்க ளருமறையை விளம்பருந்த மண்டபமா மிதனுக்
கிப்பாற், சேதஙீர்க் கலசத்தைத் தாபிக்கச் சிறந்துறுமண் டப
மா மிப்பா, வேதமொழித் தருள்புரியு மிடபமிலங் காலயமா
மிதன்பூர் வத்தில். (கூ)

ஆராய்ந்து பரதவிதி யாட்டுவிக்கப் பாரகவன் பயின்றே
யாடல், காரார்ந்த வளகத்தார் கனிவாயார் மதிமுகத்தார்
கயல்போற் கண்ணார், வாரார்ந்த வனமுலையார் நடம்புரியு

மண்டபமு மதிக்கச் செய்தான், சேரார்ந்த திருவண்ணா மலைம ருந்த னடிக்கமலஞ் சிரத்தும் வைத்தே. (௧0)

ஐந்துவிதத் தாவரணங் கோபுரமொன் பானேழா றைந்து மூன்றென், றிந்தவித நிலையுடனே யெழிலுறநாற் றிசைதனி னும் வாய்த்த லேயப், பந்தமுறுந் திருநடமா ளிகைப்பத்தி பல வுறவண் மதிலிற் பாங்காற், சிந்தைமகிழ் வுறக்கண்டார்க் கா டகத்தா னவமணியாற் சிறக்கச் செய்தான். (௧௧)

சிறந்தமுத லாவரணந் தனிலமலன் சந்நிதியிற் றிகழச் செ ய்தா, னிறங்கிளர்வெள் ளிடைகோயி லங்கிமுத லீசாந்த நிறுவி னன்சேர்ந், துறைந்திமொ லயமனலோ னெழுமாதர் கணப தியொண் குமரன் சேட்டை, யறந்திகழு மயனருக்க னென் னுமிவர் தமக்குமுறை யறிந்து தானே. (௧௨)

மற்றையிரண் டாமாவ ரணத்தங்கி திசையின்மடைப் பள ளி வாழு, முற்றவெலை நிருதிதனிற் சயனவெலை வாயுதிசை யோம மீச, முற்றிகழிந் திரன்முதலோ ருழைச்செங்கெ லனம ஞ்ச னநூலைக் கேட்கை,கற்றிடுதல கறியமுது பட்டாடை யெ லேகூபங் கற்பித் தானே. (௧௩)

மற்றைமூன்று மாவரணத் திந்திரனு தியர்கோயின் மதிக் கச் செய்தான், பற்றிமுறை நாலாமா வரணத்திற் பலவிதமண டபமும் பண்ணி, முற்றியவைந் தாமாவ ரணத்திசா னதிசை தன்னின் மொய்யார் தம்ப, முற்றிடவா யிரமணியான் மாக தமா தியின்மற்றை யுறுப்புஞ் செய்தான். (௧௪)

இயம்பியவைந் தாமாவ ரணப்புறத்தன் னிலீரைந்து தெ ன்டி னிப்பா, னயந்தருண கிரிநாத னைப்பூச னைபுரியு நம்பி மார்க்கு; வயம்பெறுமா ளிகைவகுத்தான் வடபாலின் மேல்

பாலின் வகுத்தான் வாய்க்கப், பயந்துபணி செய்யுமகத் தடி
யார்க்கு மனைதன்னைப் பாங்கி ஞலே. (௧௫)

* தென்பாலின் மறையோர்க்குஞ் சோதிடர்க்கும் வயித்தியர்
கரு மனைகள் செய்தா, னன்பாருஞ் சைவர்க்குப் பூர்வதிசை
தனின்மடங்க ளாக்கிப் பாங்கா, லின்பாலு மாவிரத ரொழுவா
யர்க் கிரண்டாம்வீ தியின்மேல் பாலின், வன்பாரு மடம்புரி
ந்தான் வடபாற்பல் சமயத்தோர் மடமுஞ் செய்தான். (௧௬)

மருத்தெனையு மருந்தியிடு மனைவகுத்தான் பிணியினர்க்கு
வடபாற் றென்பா, லருத்திகிஞ்சா லைகளன்ன மந்தணர்க்கும்
விரதியர்க்கு மமலன் சின்னந், தரித்தவர்க்கு மாதுலர்க்குந்
தளர்ந்தவர்க்கும் விருத்தர்க்குந் தம்மைத் தாங்க, வொருத்த
ரையு மற்றார்க்கு முச்சியில்வந் தாரெவர்க்கு முவகை யுற்றே.

மற்றையமூன் றாந்தெருவி னடம்புரியு மடவார்கண் மனை
கள் வீணை, யொற்றுநர்க்கு முழவாதி யொலிசெய்வார் தமக்
குமுறை யுறையுள் செய்தான், முற்றியநா லாந்தெருவுத் தரத்
தாடை வகுப்பார்க்கின் முறையாற் செய்தா, னற்றையகீழ்
பாற்குயவர் கோபாலர் முதலோர்க்கும் வகுத்தா னில்லம். ()

தெற்றியுறுந் தென்றிசையா வணவீதி தனிலரையர் வசி
யர் செட்டி, மற்றையருந் திராடைக்காய் வணிகர்மும்மை
மலவயிரிக் குயர்தே ராக்குஞ், சிற்பிமுத லோர்மனையுந் திகழ்
ந்திடச்சிந் தனைசெய்திவ் வீதிக் கப்பாற், பற்றியுற வெண்டி
சையு மாக்கினனே பொழிலீனையும் பாங்கி னுலே. (௧௯)

எழிலாரு நறுவிலியீற் கடம்பதனு லிலக்கையினு லீச
மாதி, நிழலாரு முதும்பரத்தாற் புளியதனு வாசதனு னிம்பத்
தன்னு, லழ்காரு மிறலியினு துஞ்சனைத்தான் பொழிலெட்

டும் வடபா லந்தர், தழலாதி மூன்றல்லாத் தியைந்துங் குளங் கூடஞ் சமைத்தான் ருனே. (உO)

வேறு.

புரிக்கு மப்பாற் பொழிற்புடையின் வடபா லிருப்பார் புரி சமைக்கு, மரத்தச் சர்களு மதன்வடபா லிருது வண்ணார் வசி த்திடவே, ரிருப்பார் மற்றை யிழிகுலத்தா ரிதற்கு வடபா லிப்பு ரியின், மரித்தார்க் கெல்லாம் பொழிற்புடையீ சான திக்கின் மயானந்தான். (உக)

புரிக்கப் புறத்துப் பொழிலுக்குப் பூர்வங் குரோசத் தினுக் கப்பா, லிருப்பார் புலையர் முற்பகலி னியங்கிப் புகுவ ரங் காடி, பிரித்தப் பொழுதே மீண்டிடுவர் பிறகூ றடையார் பிழைத்தடையிற், புரிக்குந் தீங்காம் புகலெ * ன்றே நிறுத்தி யிடுக பூபதிதான். (உஉ)

மன்னன் மனுநூன் முறையாலே நிறுத்திற் றரையின் மணி தரைத்தா, னின்ன லடையா னிம்மையினு மிட்ட மான பல ம்பெறுவன், றன்னை வெல்வார் தமையின்றித் தானே யாள் வான் றரைமுழுதும், பின்ன மறவே யுயிர்தோறு நிற்பா னரு ளும் பெறுவானே. (உ௩)

வேறு.

கண்டிமையோர் கம்மியன்செய் பணதியெல்லாங் கவுதம ன்றானுங் காதல் கூர்ந்தே, யண்டர்பிரா னடியிணையிற் பணிந் தமல வினிதின்னே யருச்சித் தேத்த, வெண்டிகழுந் துணர்புதி ன்மர் நடம்புரியுங் கன்னியர்க ளொழுவர் வேண்டு, மண்டல த்தென் றமலனருள் பெற்றவரைத் தருப்பைதனில் வருத் தான வாக்கால். (உச)

---

* புகல - புகற்க.

திருத்தமுறச் செய்துதிருக் கோயிலினைப் புரியினையுஞ் சிவன்முன் சென்றே, கரத்தினலர் தனைத்தூவிப் பணிந்தெழுந்து துதிசெயுமகம் மியனை நோக்கி, நிருத்தனிரு மலனருண கிரிநாத னேசத்தா லவன்றன் வேண்டும், வரத்தையருள் புரிதலுமே மாருத காதலுற மகிழ்ந்து நின்றே. (௨௫)

அறபுதனே சயபோற்றி யாருறக் கப்பாலுக் கப்பா லாய, சிற்கனனே சயபோற்றி செகத்துதய நிலைகொலைசெய் யாதே செய்யு, நிற்குணனே சயபோற்றி நின்மலனே சயபோற்றி யென்று தாழ்ந்து, மற்றிணையு மில்லாத மலவயிரி யனுமதியா லடைந்தான் வானம். (௨௬)

என்றிசைத்தா னெழிற்கமலத் தவிசினிலங் கயன்சனக
முனிக்கின் பெய்த
வென்றருளாற் சூதமுனி யிருக்குமறை முனிவருளத்
தெண்ண மொன்ற
வன்றருளிச் செய்தவழி யாராய்ந்திம் மண்டலத்துள்
ளாரு மெண்ண
வின்றிசைத்தேன் றெருத்திலங்கு மருணகிரி தன்னையென
தெணத்துள் வைத்தே. (௨௭)

வேறு

வெள்ளை யேற்றினை யேறிய வீரனே
வெய்ய வன்வினை வோறு வீரனே
யள்ள லாக்கையை நீக்கெனக் கையனே
யடிய ரிட்ட மருள்வரக் கையனே
கள்ள ருள்ளிலங் காத கழலனே
கரத்தி னேந்தக் லிற்றங் கழலனே
தெள்ளி யாருட் டிகழ்திருத் தாளனே
சிறுவ னுக்கன் றருடிருத் தாளனே. (௨௮)

வெள்ளை நுண்பொடி பூசும் விரதியே
வெம்பி னைந்துனை யேத்த விரதியே
யுள்ள வாறுரு வாக்கினை வேளையே
யூட னும்முமை கொண்டவுண வேளையே
துள்ளு மான்மறி யேந்துங் கரத்தனே
துரிசொ ழித்திடு மஞ்சக் கரத்தனே
யுள்ளு மன்பர்க் கொளிரும் பதத்தனே
யுணர்வை யாக்கிட வோதும் பதத்தனே. (உகூ)

வேறு.

பொருளினொடும் புதல்வரொடு மகிழார் புனையிழைக ளொரு வியினு நெகிழா, ரிருவினையு மிருண்மலமு மறுவா ரிடரி னொடு முடையுடலு மெறிவார், வரமுடைய வரிபதமு மதியார் மணமலரி னயனுலகு மதியா, ரருணகிரி யமலனடி நினைவா ரவனடியி னிழலினினி தமர்வார். (ஙO)

இருநிதிய மெழிலுருவு நிலையோ விடருடலை யினியதென வெனுவீ, ரொருமையுணர் வளமதனி லுறவே யொளிருமுய ரருணகிரி யுனுதீர், கருவினுள துயர்விதமு மறுவீர் கருதரிய சிவனுலகு பெறுவீர், நிருமலன தடிநிழலை யடைவீர் நிகழுநல முமதறிவி னிசமே. (ஙக)

ஆலயத்தொடுபுரியாக்கியசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ருஅO.

## தராபதிபுழுகுசாத்தியசருக்கம்.



எணமுடை யடியவ ரிடர்கடிவா னிமகிரி மகளுமை பெறு
மெழிலார், கணபதி கழலிணை கருதுநரே கரிசொடு கவலைகள்
களையுநரே, மணிவினி யுடலொடு வருமவரோ மறலியு மெதி
ரினின் மறுகுவரோ, விணினுள வணிகளை விழைகுவரோ
விமலன திணையடி விரவுவரே. (௧)

வேறு.

எழுதுபுக ழுடையா ரெழிலருண கிரியார்
புழுகுமகிழ் பெருமான் புனிதவடி புகழ்வோ
மொழுகுமல நவவா யுடலினினி யுதியோ
மழகியவி ணடைவோ மமலனடி யடைவோம். (௨)

கருதுவதன் முனமே கருதினவு முறுமே
யிருமையினு மினிதா மிருபலமு மெளிதே
யருணகிரி யரனோ டமருமுமை யடியே
யொருமையுற வுளமா தரவுமுற வுனுவோம். (௩)

வேறு.

புரியினுட னலயமும் புரிந்தமுறை புகன்றும்
பொருப்பிதனி னொருநாவி புழுகுதனை யொற்றி
யரையனென வுதித்தறிவோ டணிவித்துப் புழுகு
மடைந்ததம லன்புரியை யென்றருளிச் செய்தாய்
விரியவதன் வழிபாடும் விளம்பெனவே சனகன்
விதியடியிற் பணியவவன் விளம்பியவா றுணர்ந்தே
சுருதிவழி முனிவர்க்குச் சூதமுனி விரித்துச்
சொன்னமுறை யினையுமினி யாமுணர்ந்து சொல்வாம். (௪)

வேறு.

மானின மரைகண் மற்றை வனமிரு கங்க ளெல்லாங்
கானவர் வலையுங் கொண்டு வருதலைக் கண்டு கண்ணு
னூனுடனடுங்க வஞ்சி யோடலு மங்கோர் காவி
தானுமுள் ளச்சந் தஙகா வோடியிச் சயிலந் தன்னை. (௫)

சார்ந்துளத் தச்சந் தீர்ந்து சரித்திடுஞ் சரிக்கு நாளி
லார்ந்தவன் பாலே யிந்த வருணவெற் பிலிங்கத் தோற்றிச்
சார்ந்தெனப் புழுகு தன்னை முன்னுள தவத்தி னாலே
பேர்ந்திட லின்றித் தங்கும் பேரா ணமக்கி தென்றே. (௬)

நாடொறும் புழுகு தன்னைச் சாத்தியே நயக்கு நாளின்
மூடிய வுடலின் கன்மம் பக்குவ முற்று முற்ற
வீடிய துடலப் போதே விரைந்துயர் வெற்பை நீங்கி
நீடிய மனத்தி னிந்தக் கிரியினை நினைந்து கொண்டே. (௭)

வேறு.

மண்டலத்தென் டிசையினையுங் காக்குமனு குலமன்னன் மதிமானுய்யப்,பண்டையுணர் வொமெவனற் பாரிவயிற் றுதித்தேய யோத்தி தன்னி,லெண்டிசையும் புகழேமாங் கதனெனும்பேர் பரித்தெணத்தி னருண வெற்பைக், கண்டிதனைக் கண்ணாரக் காண்பாஞ்சென்றென்றுளத்திற்கருதிக்கொண்டே.

தந்தையனு மதிபெற்றுத் தணந்தந்தத் தலந்தன்னைத் தானைசூழச், சிந்தைமகிழ் வுறவழியிற் றீர்த்தங்கள் செறிந்தாடித் தெரிசித் தேதான், வந்தனையும் புரிந்தங்கங் கிலங்குசிவ லிங்கமயம் வாரத் தோடே, யிந்தவெழி லருணகிரி சேர்ந்துதெரி சித்திறைஞ்சி யின்ப முற்றான். (௧)

வலஞ்செய்து பதந்தன்னால் வரமருளு மருணமலை தன்னைப் பின்னுந், தலந்தன்னிற் பணிந்தெழுந்து சயயோற்றி

சயபோற்றி போற்றி யென்றே, யிலங்கவெண்ணந் தனிலிருத்தி யிருநிலமு முயவெழுந்த சிவலிங் கத்தே, நலங்கிளரும் வரைச்சாரற் பூருவதிக் காலயத்தி னணணிக் கண்டே. (௧0)

மூந்திவலம் புரிந்திடமு முதல்வனிலங் காலயத்தை முறையி னாலே, வந்தனையுஞ் செய்துமன மகிழ்ச்சியுறத் துதித்தேமான் மதமும் வாசச், சந்தனமுஞ் சாந்தகிலுங் குங்குமங்கற் பூராதி துணையுந் தேடிக், கந்தமல ராதிசிவ பூசையுப யோகமெலாங் கைக்கொண் டேதான். (௧௧)

ஆட்டுவித்தா னந்தினையு மமலனணி முடிதனிலர்ச்சகர் தம் மாலே, கூட்டுவித்தே யிமிர்தைந்து மற்றுமுள கொழுங்கனியுங் குளிர்ந்த நீரு, வீட்டிமண முறுவேல மெடுத்தாட்டுவித்ததனை நீக்கி யீரம், வாட்டியவத் திரத்தாலே பட்டாடை யணிவித்து மகிழ்ச்சி கூர்ந்தே. (௧௨)

சாத்துவித்து நறும்புழுகு சந்தனத்தி னெடுமற்றைக் கந்தமெல்லாம், வாய்த்தகருங் குவளைமுதன் மலர்மாலை யணிவித்து வாசத் தோடே,கூர்த்தவகி னறும்புகையுங் குங்கிலியப் புகையினையுங் கொடுப்பித் தானெய், தோய்த்தவிழை யிற்றீபஞ் சுடரிலங்கக் காட்டுவித்தான் சோதி தன்முன். (௧௩)

தேசிகனு லுபதேசம் பெற்றுளருந் திரர்விளைத்த செந்நெலன்னம், வாசமுள கறிவிதமும் வாழைமுதற் கனிவிதமு மற்றை யாவு, நேசமுட னிவேதிப்பித் தேனையுப சாரமெலா நிறைவித் தேதன், பாசவிதம் பறிப்பானை யலர்தூவிப் பணிந்தெழுந்து துதித்தான் பாங்கால். (௧௪)

நித்தவிழாத் திங்கள்விழா வேயத்தாற் புரிவித்தா னிறைநீர்வாய்த்த, செய்த்தலையூர்ச் சீர்மைகளுஞ் சிறப்புறவே சேர்த்தானென் டிசையி லுள்ள, பத்தரெல்லாம் வந்திட்ட வாங்கள்

பெறும் பாங்கும்பார்த் துத்தான் பாசங், கைத்தலர்தூய்ப் பணி
ந்தெழுந்து நின்றமலன் றிருமுன்னே பொழியக் கண்ணீர். ()

வேறு.

மாலையாண் டெகந்தாய் போற்றி மணங்கமழ் கின்ற கொன்றை
மாலையாய் போற்றி போற்றி மகிழ்ந்துனைவணங்குமென்னுண்
மாலைமாற் றின்னே போற்றி மடங்கியெவ் வுலகுந் துஞ்சு
மாலையி னடஞ்செய் வாயுன் மலினமு மாற்றாய் போற்றி. ()

கைதவ மென்றே நூலுட் கட்டுரைத் தானே போற்றி
கைதவ ருளத்தி னின்றுங் காணுதற் கரியாய் போற்றி
கைதவ மில்லா வன்னி யேந்தினாய் காத லார்நங்
கைதவங் கண்டென் கண்முன் புதைத்தகா சரித்தாய் போற்றி.

நாகநா ணாக்கி யொன்னார் நகரினை யெரித்தாய் போற்றி
நாகநா கத்தோ டே நயந்தருள் புரிந்தா யிந்த
நாகத்தி னுள்ளாய் போற்றி நாதனே நாளிப் போதென்
னாகத்தை நாகமென்றே நடுங்கினே னம்ப னானே. (கஅ)

என்றவன் றுதிக்கக் கேட்டே யிரங்கியுள் ளருண வெற்ப
னன்றவன் றூலவாக்கை யடக்கியைம் பூதந் தன்னி
னொன்றுநுண் ணாக்கை தன்னின் வித்தக வுருவு மாக்கிச்
சென்றிடச் சிவலோ கத்திற் செலுத்தலுஞ் சேர்ந்தா னங்கே.

ஆங்குள போகந் தன்னை யனுபவித் திருக்கின் றானுண்
ணீங்குத லறவே நிற்கு நின்மல ஞேக்கி னாலே
தூங்கிடு கால மெல்லா வுயிர்களுந் துகளுந் தீர்ந்தே [தம்.
யோங்குமுள்ளொளியைக்கண்டுதிளைப்பன்றன் னுணர்வா னந்

வேறு.

எண்ணரிய நின்னுமுள ளருணகிரி யிறைவனடி யிணையிற்
பூசை,பண்ணுவித்தா கமவிதியாற் பார்புகழ வாழ்ந்திட்ட பல

ங்கள் பற்றி, விண்ணொருவி விமலனது புரத்துறைகின் றுரு
லகம் வீயு நாளி, லுண்ணிலவும் பேருயிர் * கண் ணேமொ
ழித் தனுபவிப்ப ருணர்வா னந்தம். (௨௧)

ஆதலினாற் புழுகுமகி ழருணகிரி யமலன்மயர் தன்னி லாருங்
காதலினா னறும்புழுகு கற்பூரங் கத்தூரி சாத்து விக்கின்
மோதமுற வீண்டுறைந்து முத்தனது புரியடைவர் முடியுநாளி
லாதியருள் பெற்றுச்சற் றனுபவிப்பர் தமதுமிகு பேரானந்தம்.

மனத்தினையா லயமாக்கி மலைமருந்தற் கானைந்து மாட்டி
மற்றும், புனத்தினறும் புழுகொடுகற் பூரஞ்சந் தனஞ்சாத்திப்
போதுஞ் சூட்டித், தினத்தின்ஞ்செஞ் சாலியனந் திகழ்தூபந்
தீபமுஞ்சிந் தனையாற் செய்வார், வினைப்பகையை வென்று
சிவ புரத்திருந்தந் தியத்தடைவர் விமலன் பாதம். (௨௩)

மனத்தாலே யியற்றினிலை வாய்த்திடுமோ திருவண்ணா
மலையாற் கென்னிற், சினத்தாலே யோருரகந் தீண்டுதலு
மொருவனைமற் றொருவன் சேர்ந்தே, நினைத்தேவான் கருட
னைத்தான் பார்த்திடவவ் விடநீங்கு நினைவாற் செய்கை, யினி
த்தான்மெய் யென்றருண மலைமருந்தற் கிப்பூசை யியற்று
மென்றும். (௨௪)

கண்கொடுப்பர் குருடர்க்குக் கால்கொடுப்பர் முடவர்க்குக்
கவிகள் பாடு, மெண்கொடுப்ப ரூமர்க்கு மின்னருளாற் புதல்
வரையு மளிப்ப ரிங்கே, மண்கொடுத்து நிதிகொடுத்து மணம
லர்தூய்ப் பணிந்தெழுந்து வாழ்த்து வார்க்கு, விண்கொடுப்ப
ரதன்மேலைப் புரிவிதமுங் கொடுப்பரிணை யாய வீடும். (௨௫)

இந்தவிய லுடனேனை யியன்முழுதுங் கற்றுணர்ந்தே யின்
பங் கூரச், சிந்தைதனில் விரித்துரைப்பர் திகழுவளங் கேட்டு

---

* பேருயிர் - பரமான்மா.

ணருந் தெள்ளி யோரும், புந்திமகிழ் வுறவுறைந்து பூதலத்திற் சிவபுரத்துப் புகுந்து வாழ்வ, ரந்தமுறு நாளுலக மடைந்த மல னடிதிளைப்ப ரறிவா னந்தம். (உ௬)

என்றிசைத்தா னெழிற்கமலத் தவிசினிலங் கயன்சனக முனிக்கின் பெய்த, வென்றருளாற் சூதமுனி யிருக்குமறை முனிவருளத் தெண்ண மொன்ற, வன்றருளிச் செய்தவழி யாராய்ந்திம் மண்டலத்துள்ளாருமெண்ண,வின்றிசைத்தேன் ஞொருத்திலங்குமருணகிரிதன்னையென தெணத்துள்வைத்தே.

அருணகிரி வரமிதனை யழகுறவே யிதழெழுதி யணிந்து மையு, மருமலரா லர்ச்சித்து வாஞ்சையுறக் கற்பார்கைக் கொடுத்த மாந்த, ரிருநிலத்து மின்புற்றுச் சிவபுரம்புக் கெழுத்தொன்றற் கெய்தக்கற்ப, மொருபஃது சதமுறைவர் முற்றலுங்காலங்களஃ தொருவி மீண்டே. (உ௮)

உற்பவித்துப் பூதலத்து ளுயர்ந்தகுலத் தோதிமறை யாதி யோர்ந்தே, வெற்பையுற்றுத் தெரிசித்து விதிவழியா லர்ச்சித்து விழைந்து போற்றி, யற்புதனின் னருளாலூர்ந் தலரிரு தஞ் சிவபுரம்புக் கமர்வா ரந்தத், திற்பரம சிவன்பாதஞ் சேர்ந்துதிளைத் திருப்பார்தஞ் சித்தின் செல்வம். (உ௯)

வேறு.

காடரங் காக நடித்தவனே கதிரவன் வாயி னடித்தவனே, தோடொரு காதற விட்டவனே சுடுசர மரணற விட்டவனே,வீடவெங் கூற்றினை வென்றவனே விழியெரி காமனை வென்றவனே, மாடொரு கூறிடு மங்கையனே மான்மழு வேறிடு மங்கையனே. (௩0)

தஞ்சென வாவிகள் சார்ந்தவனே சார்ந்தவர் தம்பவ மீர்ந்தவனே, வெஞ்சின வேழ முரித்தவனே விசையனெய் வில்லு முரித்தவனே, பஞ்சம நிட்டையர் பாணலனே பத்தர்கள் குட்

டிமும் பானலனே, வஞ்சக ருள்ளத் தொளிப்பவனே மாதவ
ருள்ளத் தொளி ப்பவனே. (கூக)

## வேறு.

தணஞூர்மதி சூடுஞ்சடை முடியானடல் விடையா
னண்ணூர்புரத் தொருமூவரை நயந்தன்றருள் புரிந்தான்
பண்ணூர்மொழி யுமையாள்வலப் பாகன்பரிப் பாக
னண்ணுமலை யமலன்னடி பணிவாமுடி யணிவாம். (கூஉ)

காலாகிய மறையாகம நாலேழையு நவின்றே
மேலாகிய வழிதன்னையும் விரித்தானுய வெவரு
மாலாகிய விருவர்க்கரு மருந்தானவன் வாமப்
பாலாகிய வுண்ணுமுலை பாதம்பணி வாமே. (கூகூ)

தாரபதிபுழுகுசாத்தியசருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கூககூ.

அருணகிரிபுராணமுற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---



உ

கணபதி துணை.

# பிரகடனபத்திரிகை.

---

## அச்சிற்பதிப்பிக்கப்பட்டபுத்தகங்கள்.

கடம்பவனபுராணம்.

அருணகிரிபுராணம்.

காழியந்தாதி.

---

## அச்சிற்பதிப்பிக்கப்படும் புத்தகங்கள்.

வாயுசங்கிதை.

சீர்காழிப்புராணம்.

சிவபராக்கிரமம்.

உமாபதிசிவாசாரியார்புராணம்.

கச்சியப்பசிவாசாரியார்புராணம்.